ஞ்சை
வட்டத்தில் கல்கி!!

KALKI 18.5.86 ரூ. 1.50

# கல்கி



# பளபளக்கும் பட்டும்; பரிதவிக்கும் நெசவாளர்களும்!




# பிலிப்ஸ்

## ஒரு பல்பு உங்களை மிக அழகாக ஏமாற்ற முடியும் தெரியுமா?



இப்பொழுதெல்லாம் லைட் பல்புகள் அழகழகான வாக்குறுதிகளைத் தருகின்றன. நீடித்த ஆயுள், தரமேன்மை, அது இது என்று பல வாக்குறுதிகள்.

ஆனால் வாங்குவோருக்கு இவ்வாக்குறுதிகள் பற்றி சோதித்து அறிய வழியில்லை. ஏன் தெரியுமா? பார்த்தால் எல்லா பல்பும் ஒரே மாதிரிதான்.

கொஞ்சம் காலம் கழித்து தான் உண்மை புலப்படும். தரம் வெட்ட வெளிச்சமாகிவிடும். குறைந்த ஒளி தந்து, கூடுதல் மின்சாரத்தை விழுங்கி அற்ப ஆயுளிலே அதன் கதையும் முடிந்து விடும்.

இந்நிலையில் சரியான பல்பை எப்படித்தான் கண்டு பிடிப்பது?

50 ஆண்டுகளுக்கும் மேலாக நம்பிக்கைக்குப் பாத்திரமான பல்பைத் தேர்ந்தெடுப்பதுதான் பாதுகாப்பான முறை. அதாவது பிலிப்ஸ் நிறுவனம் 100 % சரியாக சோதிக்கப்படும் பல்புகளை வழங்கி, அவற்றின் மூலம் ஒவ்வொரு வாட்டிற்கும் நீங்கள் செலவிடும் பணத்திற்கு 100 % மதிப்பை அளிக்கிறது இந்த நிறுவனம்.

100 % நம்புங்கள்.
வாங்குங்கள் பிலிப்ஸ்.




தோற்றத்தில் எல்லா பல்புகளும் ஒன்றுதான். ஆனால் பிலிப்ஸ் என்றாலே நம்பிக்கைக்கு உறுதி.

**பிலிப்ஸ்–ஐம்பது ஆண்டுகளுக்கும் மேலாக இந்திய வீடுதோறும் விளங்கும் நம்பகமான பெயர்**

# கருணாநிதி கட்டியதால் கவனிக்கவில்லையா?



உடைந்து நிற்கும் தமிழ்த் தாய் சிலை....

இலக்கியச் சிறப்புக்களையும் சரித்திரச் சிறப்புக்களையும் நினைவுபடுத்தும் வகையில்தான் கருணாநிதி ஆட்சிக் காலத்தில் பூம்புகார் ஒரு நினைவு சின்னமாக்கப்பட்டு, இன்றும் அமைச்சராக இருக்கும் நெடுஞ்செழியன் தலைமையில் திறந்து வைக்கப்பட்டது. அப்படிப்பட்டதோர் இடத்தைப் பார்க்காமல் இருக்க முடியுமா? அதுவும் தஞ்சை மாவட்டத்திற்குச் சென்றுவிட்டு? எனவே கிளம்பினோம்!

நாங்கள் சென்ற நேரம் நல்ல உச்சி வெயில் நேரமாதலால் பூம்புகாரில் இறங்கியவுடனேயே சிறிது ஓய்வெடுக்க எண்ணினோம். பஸ்ஸை விட்டு இறங்கியதும் கண்ணில் பட்ட 'சிலம்பு வடிவில் தங்கும் விடுதி'க்குச் சென்றோம். செல்லும்போதே, 'சிறுநீர் நாற்றத்தையும், மல நாற்றத்தையும் தாங்கிக் கொண்டுதான் செல்ல வேண்டியதாயிற்று. அந்தக் கட்டடத்தைச் சுற்றிலும் அப்படியோர் அசிங்கம். அதற்காகவே வட்டமிட்டுக் கொண்டிருக்கும் பன்றிகள்! நொந்து போனோம்.

இத்தனையையும் மீறி உள்ளே சென்றபோது, சரியாகப் பராமரிக்கப்படாததால் அந்தத் தங்கும் விடுதியே அங்கங்கே பழுதடைந்து ஒரு குட்டிச் சுவரைப் போல்தான் காட்சியளித்தது. வெறுத்துப் போய் வெளியில் வந்து, ஏதோ தமிழ்நாடு சுற்றுலாத் துறையினர் நடத்தும் உணவு விடுதி இருப்பதாகச் சொன்னார்களே அங்காவது சென்று குளிர்ச்சியாக ஏதாவது குடிக்கலாம் என்று சென்றால் அந்த எண்ணத்திலும் மண்தான்! பல காலமாகவே அந்த விடுதி பூட்டப்பட்டு இருப்பதாகச் சொன்னார்கள்.



ஒழுங்காகப் பராமரிக்கப்பட்டு வரும் கலைக்கூடம்

வேறு வழியின்றிக் கடற்கரையை நோக்கிச் சென்றோம். அங்கு கடலைப் பார்த்தபடி நின்றிருந்த தமிழ்த் தாய் சிலையின் முகம் இரண்டாகப் பிளந்து காணப்பட்டது. அருகிலிருந்த மீனவர்களை விசாரித்தபோது, "பல காலமாகவே அந்தச் சிலை அப்படித்தான் உடைந்து கிடக்கிறது" என்று சகஜமாகச் சொன்னார்கள்.

தமிழ்த் தாயின் கதியை நினைத்து பரிதாபப்பட்டுக் கொண்டே அதனருகிலிருந்த இலஞ்சி மன்றத்துக்குள் நுழைந்தோம். சிலப்பதிகாரக் குறிப்புப்படி இலஞ்சி மன்றத்திலுள்ள பொய்கையும், அதிலுள்ள தண்ணீரும்தான் முக்கியம். ஆனால் இப்போது அங்கு அமைக்கப்பட்டுள்ள பொய்கையில் தண்ணீரே இல்லை; வறண்டு கிடந்தது.

அடுத்துச் சிலப்பதிகாரத்திலுள்ளபடி கோவலன், கண்ணகி, மாதவி ஆகியோரின் வாழ்க்கை நிகழ்ச்சிகளைச் சிற்பங்களாய் வடித்து வைக்கப்பட்டிருக்கும் கலைக் கூடத்திற்குச் சென்றோம். உண்மையிலேயே அது மிக நன்றாகப் பராமரிக்கப்பட்டு வருகிறது. அத்தனை சுத்தம்; எங்களுக்கே ஆச்சரியமாகப் போய்விட்டது!

அந்த ஆச்சரியத்தோடு, அங்கு வரும் சுற்றுலாப்பயணிகள் தங்குவதற்காகத் தமிழக சுற்றுலாத் துறையால், கடற்கரையோரத்தில் கட்டப்பட்டுள்ள சங்கு, சிப்பி வடிவங்களிலுள்ள குடில் (Cottage) களைக் காணச் சென்றோம். அப்போதும் சில மனிதர்கள் செய்து வைத்திருக்கும் அசிங்கங்களில் படாமல் குதித்துக் குதித்துத்தான் செல்ல வேண்டியிருந்தது. இந்த நிலையில் அங்கு எந்தச் சுற்றுலாப் பயணி வந்து தங்குவார் என்று எதிர்பார்க்கிறார்களோ, தெரியவில்லை!

அதேபோல்தான் சிலப்பதிகாரக் காலக் கொற்றப் பந்தலை நினைவூட்டும் திறந்த வெளி அரங்கும் அசிங்கப்பட்டுக் கிடந்தது. பார்த்



* சிலம்பு வடிவில் தங்கும் விடுதி

துப் பார்த்து நொந்து போனேன்.

கடைசியாக அங்கிருந்த உள்ளூர்வாசிகளிடம், "கலைக் கூடத்தைத் தவிர ஏன் மற்றப் பகுதிகள் ஏதும் பராமரிக்கப்படாமல் பாழடைந்து கொண்டிருக்கின்றன?" என்று விசாரித்தபோது,"இவையெல்லாம் கருணாநிதி ஆட்சிக் காலத்தில் கட்டப்பட்டது என்ற ஒரே காரணத்திற்காகத்தான் எம்.ஜி.ஆர். அரசு இத்தனை அசிரத்தையாக இருக்கிறது!" என்றார்கள்.

அரசின் செங்கோல் தவறினால் பாவை மன்றத்திலுள்ள சிலைகள் கண்ணீர் விட்டு அழும் என்று சிலப்பதிகாரம் சொல்லுகிறதே! இப்போது எப்படி? பாவை மன்றத்திற்குச் சென்று பார்த்தோம். எந்தச் சிலையும் அழவில்லை. அப்படியானால் அரசின் செங்கோல் தவறவில்லை என்று அர்த்தம்? இல்லை; இல்லை! அழுதழுது இனியும் அழ முடியாத அளவுக்கு அந்தச் சிலைகளின் கண்ணீர் வறண்டு போய்விட்டது என்றுதான் அர்த்தம்!

# இந்தக் கோட்டை மீது என்ன கோபம்?

* தமிழ்நாட்டில் முதன் முதலில் அச்சுக் கூடம் எங்கு நிறுவப்பட்டது தெரியுமா?

* இந்தியாவுக்கு வந்த முதலாவது ப்ராடஸ்டண்ட் பாதிரியார் யார்?

* ஆரோக்கியமளிக்கும் ஓஸோன் காற்று (அடர்த்தியான இறுகிய பிராண வாயுவுக்கு ஓஸோன் என்று பெயர்) இந்தியாவிலேயே அதிக அளவில் வீசும் இடம் எது?

மேற்கண்ட கேள்விகளுக்கெல்லாம் பதில் தரங்கம்பாடியில் கிடைக்கும்! ஆம் ட்ரான்குபார் என்று ஆங்கிலத்தனமாக அழைக்கப்படும் தரங்கம்பாடியேதான்!

தஞ்சை மாவட்டத்தில் மாயவரத்திலிருந்து செம்பனார் கோவில் வழியாகப் போனால் 25 கி. மீ. தூரத்தில் உள்ளது தரங்கம்பாடி. அழகான கடற்கரை. பழைமையைக் காப்பாற்றியே தீர வேண்டுமென்ற அரசின் பிடிவாதத்தால் பாழடைந்து கொண்டு வரும் கோட்டைகள் — கட்டடங்கள்.



* தரங்கம்பாடி கோட்டை

1620 லிருந்து 1815 வரை இங்கு டச்சுக்காரர்கள் இருந்தபோது வந்தவர்தான் ஸிபன் பால்க் (Zieben Balg) என்ற ப்ராடஸ்டண்ட் பாதிரியார். அவர்தான் முதன் முதலாகத் தமிழில் ஓர் அச்சுக்கூடத்தைத் தரங்கம்பாடியில் நிறுவி பைபிளை அச்சடித்தார். 1845க்குப் பிறகு இது டச்சுக்காரர்களிடமிருந்து பிரிட்டிஷாரால் வாங்கப்பட்டுவிட்டது. அவர்கள் காலத்தில் கட்டி வைத்த கட்டடங்கள் பாழாய்ப் போய்க்கொண்டிருக்கின்றன. குறிப்பாகக் கடற்கரையோரம் பிரிட்டிஷ் கவர்னர் தங்குவதற்காகக் கட்டப்பட்ட பங்களாவும், அதற்கடுத்து உள்ள பங்களாவும் குட்டிச் சுவர்கள் என்று சொல்லும் அளவுக்குச் சிதிலமடைந்துவிட்டன.

தரங்கம்பாடி வாசிகளுக்கு அவ்வப்போது வீடு கட்டச் செங்கற்கள் தேவைப்பட்டதால், நகரைச் சுற்றிக் கட்டப்பட்டிருந்த மதில் சுவரையே காணாமல் போகும்படி செய்து விட்டார்கள். இந்தத் திருட்டு வேலைகள் நடந்தபோது தொல்பொருள் இலாகாவினர் எங்கு காணாமல் போயிருந்தனர்



* மாசிலாமணிநாதர் கோவில்

என்று தெரியவில்லை. இப்போது நட்டுத் தடுமாறி நிற்பது கோட்டையின் முகப்பு மட்டும்தான்.

கோட்டையைச் சுற்றிக் காட்டினார் உள்ளூர் நண்பர் கவுஸ். தூக்குப் போடும் இடம், சுரங்கப்பாதை, மாலை நேரத்தில் ராணி ஹாய்யாகக் காற்று வாங்கும் இடம் என்று பார்த்துக் கொண்டு வந்தபோது முகமது யூசுப் என்ற பெரியவரைச் சந்தித்தோம்.

மே, ஜூன், ஜூலை மாதங்களில் தரங்கைக் கடற்கரையில் வீசும் அதிக அளவு ஓஸோன் காற்றைப் பற்றிக் குறிப்பிட்டார். ''ரத்தக் கொதிப்பு உள்ளவர்களும், இதய நோய் உள்ளவர்களும் அந்த மாதங்களில் இங்கு வந்து காற்றுவாங்கிச்செல்வார்கள்'' என்றார் அவர்.

கவர்னர் கே.கே. ஷா இருந்தபோது தரங்கம்பாடியைச் சுற்றுலாத் தலமாக்க வேண்டும் என்ற எண்ணத்திலும், கோட்டையை விருந்தினர் விடுதி ஆக்க வேண்டும் என்ற எண்ணத்திலும் சில ஏற்பாடுகளைச் செய்ய, மத்திய அரசின் தொல்பொருள் இலாகா முட்டுக்கட்டை போட்டுவிட்டது. இது மட்டுமல்ல இந்தக் கோட்டை சிதிலமடைந்து கொண்டே வருவதைக் கண்ட டச்சுக்காரர்கள், தாங்களாவது அதைப் பாதுகாக்க அனுமதிக்க வேண்டும் என்று கேட்டபோது அதையும் மறுத்துவிட்டதாம் மத்திய அரசு! எப்படி?

இப்படிக் கோட்டையின் பழம் பெருமைகளைக் கேட்டுக் கொண்டே இப்போது அது எந்த அளவுக்குப் பாழடைந்து கொண்டிருக்கிறது என்பதையும் கண்டு வேதனைப்பட்டுப் பிறகு கடலின் மிக அருகில் உள்ள மாசிலாமணி நாதர் கோவிலுக்குள் நுழைந்தோம். பாதிக் கோவில் இடிந்து போய்விட்டது. கையில் எண்ணெய்த் தூக்குடன் மிச்சம் மீதியிருக்கும் சன்னதிகளுக்குச் சென்று கொண்டிருந்த மீனாட்சிசுந்தர குருக்களைச் சந்தித்தோம். அவருக்கு ஐந்து குழந்தைகள். சம்பளம் மாதம் இரண்டு மூட்டை நெல்லும் நூறு ரூபாயும். அதுவும் பல சமயங்களில் ஒழுங்காக வருவதில்லையாம்! இத்தனைக்கும் இந்த கோவிலுக்கு முப்பது வேலி நிலம் இருக்கிறது. இவற்றோடு இந்தக் கோயிலைப் புதுப்பிப்பதற்காக அறநிலையத்துறை ஆறு லட்சம் ஒதுக்கியிருக்கிறதாம். இருந்தாலும் என்ன கஷ்டமோ தெரியவில்லை; இன்னும் புதுப்பிக்கப்படும் வேலை எதும் துவங்கப்படவில்லை!

கடைசியாக - நாங்கள் திரும்பும்போது பழைய அடிக்கல் ஒன்று கண்ணில் பட்டது. இதுவும் டச்சுக்காரர்கள் காலத்தது போலிருக்கிறது என்று கிட்டே போய் உற்றுப் பார்த்தபோது, 18.2.74ல் ஹரிஜன விடுதி கட்டுவதற்காகக் கலைஞர் நாட்டிய அடிக்கல் என்று தெரிய வந்தது. அதையும் பாழடைந்து வரும் ஒரு பழைமைச் சின்னமாக மாற்றிவிட்ட அ.தி.மு.க. அரசு பாராட்டுக்குரியதுதான்!

— கௌசல்யா

படங்கள்: மணி

# அரசியலா வேண்டாம் சுவாமி!



கடந்த 85 ஜூலையில் தஞ்சாவூர் நகராட்சியில் ஒரு திடீர் அறிவிப்பு. மின்சாரக் கட்டணம் உயர்வு பற்றித்தான். வீடுகளுக்கு ஒரு யூனிட் அறுபது காசாக இருந்தது எண்பது காசாக உயர, கடைகளுக்கு ரூ. 1.10 ஆக இருந்தது ரூ. 1.40 ஆக உயர ஆரம்பித்தது. ஜனங்கள் சற்று பதைபதைக்க, உடனே பிரச்னையில் தலையிட்டு, கேஸ் போட்டு கோர்ட்டில் 'ஸ்டே' வாங்கி மின்சாரக் கட்டண உயர்வுக்கு ஒரு 'ப்ரேக்' போட்டிருக்கிறது தஞ்சை கன்ஸ்யூமர் கவுன்ஸில். எஸ். டி. எஸ். கட்சிச் சின்னமான 'தராசை' பிரபலப்படுத்தும் கன்ஸ்யூமர் கவுன்ஸின் தலைவரான சீனிவாச நாராயணசாமி,

''தஞ்சாவூர் நகராட்சி, மின் வாரியத்திலிருந்து ஒரு யூனிட்டை முப்பத்தைந்து பைசாவுக்கு வாங்கி அறுபது காசுக்குக் கொடுத்து வந்து, இப்போது அதை உயர்த்தியதால்தான் 'கேஸ்' போட்டோம்'' என்றார். அங்கு மிங்கும் உள்ளூர்ப் பிரச்னைகளில் ஓடியாடிச் செயல்படுகிறார்கள். வெளியூர்களில் உள்ள பிரச்னைகளுக்காகப் போராடவும், நியாயம் பெறவும் உதவுகிறார்கள். இது போன்ற பொதுநலக் காரியங்களுக்காக அங்கங்கே கிளைகள் அமைத்துப் போராட இவர்கள் வழிகாட்டுகிறார்கள்.

தஞ்சை மாவட்டம் முழுக்கக் கிளைகள் வேறு இருக்கின்றன. அரசு ஊழியர்களும் இருக்கிறார்கள். "அரசியல் தொடர்புள்ளவர்களை அமைப்பினுள் நுழைய விடுவதில்லை என்று முடிவு செய்திருக்கிறோம்'' என்கிறார்கள் தீர்க்கமாக. வியாபாரிகள் சரியான 'எடை' போடுகிறார்களோ இல்லையோ, இவர்கள் சரியாகத்தான் எடை போட்டிருக்கிறார்கள் அரசியலில் இருப்பவர்களை!

'டெசோ' மாநாடு:

# இலங்கை அரசின் அநீதிகளுக்கு அகில இந்தியக் கண்டனம்!

* மதுரையில் ஈழத் தமிழர் பாதுகாப்பு மாநாட்டை நடத்தியது 'டெசோ' (தமிழ் ஈழ ஆதரவாளர் அமைப்பு) என்றிருந்தாலும், ஏறத்தாழ தி. மு. க. மாநாடு மாதிரியான தோற்றமே வெளியில் கிடைத்தது. நகரில் எங்கு பார்த்தாலும் தி. மு. க. கொடிகள், வளைவுகள். அங்கங்கே அபூர்வமாய்த் தமிழ்நாடு காமராஜர் காங்கிரஸ் கொடிகள். 'டெசோ'வுக்கென்று தனியாகக் கொடியோ, அடையாளச் சின்னமோ — இடையாதோ என்று நினைக்க வைக்கிற அளவுக்குக் கட்சிக் கொடிகள்.

* விமான நிலையத்திலிருந்து வருகிற வழியில் வில்லாபுரம் அருகே பிரமாதமாய் ஒரு அலங்கார வளைவு. 'என்ன ஆச்சரியம்' என்று பார்த்தால், 65 வது வட்ட தி. மு. க. சார்பில் அலங்கார வளைவை அமைத்திருப்பவர் யார் என்கிறீர்கள்? அமைச்சர் காளிமுத்துவின் மனைவியான நிர்மலா காளிமுத்துதான்! முதலில் கலைஞரிடத்தில் 'பிள்ளை'களுக்குப் பெயர். இப்போது 'தமிழ் ஈழம் காணும் கலைஞரே வருக வருக' என்று கரிசனத்துடன் அலங்கார வளைவு!! அதுவும் கலைஞர் கருணாநிதி அந்தப் பக்கம் வரும்போது நிர்மலா காளிமுத்து, கலைஞர் பெயர் சூட்டிய குழந்தைகளுடன் நின்று கைகாட்ட, கலைஞரும் சந்தோஷமாய்க் கைகாட்ட, சுற்றிலுமிருந்த தி. மு. க. தொண்டர்கள் அமைச்சரை 'அன்புடன்' நினைத்துக் கொண்டு சிறு கரகோஷம்.

* மாநாடு நடந்த இரண்டு நாட்களாக எங்கே பார்த்தாலும் ஒலி பெருக்கிகள். எல்லாவற்றிலும் கலைஞர் பாட்டு; இல்லையென்றால் டி. ராஜேந்தர் பாட்டு. சுற்றிச் சுற்றி வளைய வந்த லாரிகளில் கூட ராஜேந்தர் பாட்டு. 'ராஜேந்தர்' பாட்டை நாம் தான் கவனமாகக் கேட்டுப் பார்க்க வேண்டும்; தமிழ் ஈழத்திற்கான பாதை ஏதாவது பாட்டிற்கிடையில் அகப்படுகிறதா என்று!

* மாநாட்டிற்கு முன்னால் இலங்கை விடுதலைக்குழுத் தலைவர்களுடன் பேச்சு வார்த்தைகள் நடந்தன. விமானம் தாமதம் என்பதால் மதியத்திற்கு மேல் நடந்த 'டிஸ்கஷ'னுக்கு நுழைகிறவர்களை ஒரு போலீஸ் 'மெட்டல் டிடெக்டர்' கருவி பரிசோதித்தது. சமீபத்தில் இரு விடுதலைக் குழுக்களுக்கிடையில் நடந்த சண்டையைப் பற்றிப் பேச்சு திரும்பி, 'இனிமேல் ஒற்றுமையாக இருப்போம்' என்று விடுதலைக் குழுக்கள் உறுதி மொழி எடுத்துக் கொண்டன. இந்தப் பேச்சு வார்த்தைகளில் நான்கு குழுக்கள் கலந்து கொண்டன.

* பேச்சு வார்த்தை நடந்த பாண்டியன் ஹோட்டல் முன்பு விசேஷமாக இரண்டு பெரிய 'கட்-அவுட்'களை, மாவட்ட தி. மு. க. நிறுத்தியிருந்தது. ஒன்றில் கருணாநிதியும், மற்றொன்றில் காவி சகிதமாக என். டி. ஆரும் சிரிக்கின்றார்கள். "கலைஞராவது சரி.... ஈழத்திற்காகப் பாடுபடுகிறார். என். டி. ஆர். மாநாட்டை ஒட்டி வந்துபோகிறவர். இவரைவிட ஈழத்திற்கே போய் வந்த எங்கள் தலைவருக்கு 'கட்-அவுட்' வைத்திருக்க வேண்டாமா?" என்று புலம்பாத குறையாகச் சொன்னார்கள் அங்குமங்கும் அலைந்து வேலை பார்த்துக் கொண்டிருந்த நெடுமாறன் கட்சிக்காரர்கள்.

* பந்தயத் திடல். ஜே ஜே என்று அவ்வளவு கூட்டம். நான்கு மணிக்கு ஆரம்பிக்க வேண்டிய கூட்டம் லேட். ஆறரை மணி வரை நெடுமாறன் மட்டுமே அங்குமிங்கும் அலைந்தபடி இருந்தார். ஆறரை மணி. மாநாட்டைத் துவக்க வேண்டிய என். டி. ஆர். காவி உடையும் குமாரான கிராப்புமாக வந்து எம். ஜி. ஆர். பாணியில் — விறுவிறு

* நிர்மலா காளிமுத்து பெயரால் கலைஞருக்கு வரவேற்பு வளைவு.






சென்று மேடையின் ஓரம் ஓரமாய்ப் போய்க் கும்பிட, கைதட்டல். வேறு யாரும் வரவில்லை. வந்தவர் ஒரு நாற்காலியில் உட்கார்ந்திருந்தார். நேரம் ஆயிற்றே ஒழிய யாரும் வரவில்லை. பேசாமல் கொட்டாவி விட்டபடி, கண்ணாடியைத் திருப்பித் திருப்பிச் சுழற்றி மாட்டியபடி அரை மணி நேரமாய் உட்கார்ந்திருந்தார் என். டி. ஆர். அரை மணி நேரம் கழித்தே வந்தார்கள் வாஜ்பாயும், கலைஞரும்.

- கூட்ட நெருக்கடியில் அடிக்கடி அடிதடி. ஒரு துணை டி. எஸ். பி. காலரியிலிருந்து தள்ளிவிடப்பட, போலீஸார் விரட்டிய விரட்டலில் இரண்டு மூன்று பேருக்கு மண்டை உடைந்து போயிற்று. கூச்சலும் அதிகம். ஆரம்பத்தில் கலைஞர் பேசியது அவ்வளவாக யாருக்கும் கேட்கவில்லை. வரவர கலைஞரின் முகம் சீரியஸாகிக் கொண்டு வந்தது. இரண்டு மைக்குகளில் ஒன்று வேலை செய்யவே இல்லை. கலைஞர் எழுந்தார். நேரே நின்று கொண்டிருந்த மைக்கைத் தூக்கி அப்படியே எரிச்சலில் தரையில் கிடத்தினார். பக்கத்திலிருந்த என். டி. ஆர் காலில் மைக் விழாத குறை.

- அநேகம் பேர் தமிழில் பேச ஆரம்பித்தது விசேஷம். என். டி. ஆர். முழுக்கவும் தமிழில் பேச முயற்சி பண்ணினார். தெலுங்கு பழகிய நாக்கில் திக்கித் திணறித் தமிழ் வருமுன்பு என்ன சிரமம்? ஆனால் என். டி. ஆர். சிரமப்பட பட்டது மாதிரி வெகு சிரத்தையோடு ஏதோ தமிழ் படிக்க வந்தவர் மாதிரி படித்துக் கொண்டிருந்தார். ''இலங்கைப் பிரச்னை வெறும் அரசியல் பிரச்னை மட்டுமல்ல. உணர்ச்சிமயமான பிரச்னை. இலங்கையில் நடப்பது குருக்ஷேத்திர யுத்தம்...'' என்று உச்சஸ்தாயியில் கெடுபிடியான தமிழில் பொருத்தமாக உபதேசம் பண்ணினார் இந்த ஆந்திரக் கிருஷ்ணர். சுப்பிரமணிய சுவாமியும் கர்நாடக அரசு கொறடா பெருமாளும் தமிழில் பேச — புரிந்ததோ, இல்லையோ, அரைகுறைத் தமிழ் காதில் விழுந்ததில் நம் ஆட்களுக்குத்தான் என்ன சந்தோஷம்!

- வாஜ்பாயி ஆங்கிலத்தில் பேசும்போது படு 'எமோஷனல்.' 'இலங்கையில் பாதிக்கப்பட்ட தமிழர்கள் நமது ரத்தத்தின் ரத்தங்கள்; நமது எலும்பின் எலும்புகள்' என்று தமிழகத்திற்குப் பழக்கமான பாணியில் ஆக்ரோஷமாகப் பேச, உடன்பிறப்புக்கள் பரவசப்பட ஆரம்பித்துவிட்டார்கள். இதையெல்லாம் விட பேசிய தலைவர்கள் அநேகம்பேர் தி. மு. க. வையும், கலைஞரையும் ஏகமாய்ப் புகழ்ந்தார்கள். தெலுங்கு தேச உபேந்திரா சமீபத்திய பஞ்சாயத்துத் தேர்தலில் தி. மு. க. பெற்ற வெற்றிக்கு விசேஷ வாழ்த்தே சொன்னார். பகுகுணாவுக்குத்தான் எவ்வளவு ஆவேசம்! ''ஜெயவர்த்தனேயின் அரசை எதிர்த்து அகில இந்திய அளவில் மிகப் பெரிய எதிர்ப்பை உருவாக்க வேண்டும். இந்த விஷயத்தில் எம். ஜி. ஆரை விட வயதில் இளையவராக ராஜீவ் காந்தி இருந்தாலும் — அவரை விட நோயாளியாக இருக்கிறார்! இந்த நேரத்தில் தமிழகத்தில் ஒரு நோயாளி முதலமைச்சராக இருப்பது எவ்வளவு துரதிர்ஷ்டவசமானது!'' என்று சரமாரியாக ராஜீவையும், எம். ஜி. ஆரையும் தாக்க — மழைத்தூறலில் நனைந்தபடி நின்று கொண்டிருந்தவர்களுக்கு — சூடாய்க் காப்பி சாப்பிட்ட மாதிரி ஒரு நிறைவு.



- காத்திருந்து... காத்திருந்து — என். டி. ஆர்.

* காஷ்மீரிலிருந்து பரூக் அப்துல்லா கட்சியைச் சேர்ந்த அப்துல் ரஷீத் காபூலி கருணாநிதி அணிவித்த மாலையோடு பேசினார். "நாங்கள் காஷ்மீரிலிருந்தாலும் தமிழர் பிரச்னையைப் பார்த்துக் கொண்டு சும்மா இருக்க முடியாது. தமிழகத்தின் உண்மையான பாதுகாவலர் கருணாநிதிதான். கருணாநிதியின் குரலாக பரூக் அப்துல்லா செயல்படுவார்" என்றார். பஞ்சாபிலிருந்து வந்திருந்த அகாலிதளப் பொதுச் செயலாளர் பல்வந்த் சிங் ராமுவாலியா, "ஆயிரம் ஜெயவர்த்தனேக்கள் வந்தாலும், தமிழர் போராட்டத்தை அழித்துவிட முடியாது" என்று பேச — இலங்கைப் பிரச்னைக்கு ஒரு தேசியத் தன்மை கிடைத்த மாதிரி இருந்தது.

* சிலரது பேச்சை வை. கோபால்சாமி எம். பி. மொழிபெயர்க்க, வாஜ்பாய் பேச்சை — ஜனா கிருஷ்ணமூர்த்தி மொழிபெயர்த்தார். கர்நாடகாவிலிருந்து வந்த உள்துறை அமைச்சர் ராச்சையா கன்னடத்தில் பேச — மொழிபெயர்க்க ஆளே இல்லை. அமைச்சரும் கவலைப்படாமல் — கன்னடத்தில் அவர்பாட்டுக்குப் பேசிவிட்டுப் போனார்.

* அமிர்தலிங்கம், சந்திரஹாசன், காசி ஆனந்தன் — போன்றவர்கள் வந்து உட்கார்ந்திருந்தார்களே ஒழிய எதுவும் பேசவில்லை. மேடையிலேயே கூட்டம் அதிகம். சமயங்களில் சிலருக்கு இருக்கையைக் கொடுத்துவிட்டு எழுந்து நின்றபடி இருந்தார் நெடுமாறன். முழுமூச்சாய் மாநாட்டுக்காக இறங்கி அவ்வளவு வேலைகளையும் பார்த்துக்கொண்டிருந்த நெடுமாறன் பத்து நிமிடங்கள் கூடப் பேசவில்லை. மைக்கும் சரியில்லாமல் கூட்டமும் சத்தம் போட, வெகு சுருக்கமாக உட்கார்ந்துவிட்டார். மாநாடு ஆரம்பித்துக் கொஞ்ச நேரத்திலேயே மழை ஆரம்பித்தும் ஏறத்தாழ ஐந்து லட்சம் வரை திரண்டிருந்த கூட்டம் கலையாமல் கடைசி வரை இருந்தது ஒரு விசேஷம். கருணாநிதி பேசும் போது, "1956 ல் நேரு சென்னைக்கு வந்தபோது கூடிய கூட்டத்தை அடுத்து இப்போதுதான் இவ்வளவு பெரிய கூட்டத்தைப் பார்க்கின்றேன்' என்று பகுகுணா என்னிடம் சொன்னார்" என்று கொஞ்சம் பெருமிதத்துடன் சொல்லிக் கொண்டார். தொடர்ந்து, இலங்கைக்கு எந்த விதமான உதவியும் செய்யக் கூடாது; தொடர்ந்து பேச்சு வார்த்தையை நடத்திக் கொண்டிருக்கக் கூடாது; மத்திய அரசு தீர்வு காணத் தன் கொள்கையை மாற்றிக் கொள்ள வேண்டும்" என்ற தீர்மானத்தைப் படித்தார். இந்த மாநாட்டில் விடுதலைப் போராளிகளிடம் உள்ள சண்டை சச்சரவுகளை இவர் நேரடியாய்க் கண்டித்து எச்சரித்தது முக்கியமானது. "இன்று நடத்திய பேச்சு வார்த்தையின் போது, 'இனி ஒற்றுமையாகச் செயல்படுவோம்' என்ற உறுதிமொழியைப் போராளிகள் அளித்திருக்கிறார்கள். நம்புகிறோம். அவர்கள் கொடுத்த நம்பிக்கை வெறும் உதட்டளவு உச்சரிப்பாக இருக்காது என்று நம்புகிறோம்" என்றார் கலைஞர் தமது பேச்சை முடிக்கும்போது.

— ஞாநி.

படங்கள்: கே. செல்வா; சுபா

# மாதம் ஒரு மாவட்டம்

தர்மபுரி மக்களே, நினைவிருக்கிறதா? கல்கி ஏற்றிருக்கும் சமுதாயப் பணியில் ஐந்தாவது மாவட்டமாகத் தேர்ந்தெடுக்கப் பட்டிருப்பது உங்கள் தர்மபுரி மாவட்டம் தான் என்பது! உங்கள் மாவட்டத்திலுள்ள குறைகளும் முறையீடுகளும், அநீதிகளும் தவிர, பெரிய சாதனைகள் பற்றிய கடிதங்களும் கல்கி அலுவலகத்திற்கு வந்து சேர வேண்டிய கடைசி தேதி: 20.5.86.

உடனே எழுதி அனுப்புங்கள்.

— ஆசிரியர்.



பி. கு.: இப்போது நமது பிரதிநிதிகள் கன்னியாகுமரி மாவட்டத்தில் சுற்றுப்பயணம் செய்து கொண்டிருக்கிறார்கள். அம்மாவட்டம் பற்றிய பரபரப்பூட்டும் செய்திகளும், கட்டுரைகளும், புகைப்படங்களும் ஜூன் 8, 15 தேதியிட்ட இரு கல்கி இதழ்களிலும் பிரசுரமாகும்.

# ஃபாரெக்ஸ்® முதன்முதல் தேர்வு!

## ஏனெனில் புதிய மேம்பட்ட ஃபாரெக்ஸ்® முதன்முதலாக திட உணவிற்கு மாறும் குழந்தைக்கென இன்றியமையாத உட்பொருள்கள் சரியான அளவுகளில் சேர்க்கப்பட்டதாகும்.

குழந்தையின் வளர்ச்சிக்கும் மென்மையான செரிக்கும் சக்திக்கெனவும் சரியான அளவில் புரதங்களும் கொழுப்புச் சத்துக்களும் அடங்கியதாகும் ஃபாரெக்ஸ்.

குழந்தையின் இரத்தத்தை ஆரோக்கியமாக வைக்க இதில் போதுமான அளவு இரும்புச் சத்தும் உள்ளது.

குழந்தையின் எலும்புகளும் பற்களும் திடமாக வளருவதற்கு உகந்த விகிதத்தில் கால்ஷியம்-ஃபாஸ்ஃபரஸ் அடங்கியதாகும் ஃபாரெக்ஸ்.

இவை தவிர, புதிய ஃபாரெக்ஸ் கலப்பதற்கு எளிதானது...சுவைமிக்கது.




பால் சேர்க்கத் தேவையில்லை!

நீருடன் கலந்து கொடுத்தால் போதும்.

புதிய மேம்பட்ட **ஃபாரெக்ஸ்®**

# GLAMOUR GIRL



உங்கள் மேனியின் அழகுக்கு அழகூட்ட கிளாமர் கேர்ள் பியூட்டி சோப், டால்கம் பவுடர், நகப்பூச்சு மற்றும் லிப்ஸ்டிக் இப்பொழுது தமிழகமெங்கும் கிடைக்கிறது. கிளாமர் கேர்ள் தயாரிப்புகள் நாள் முழுவதும் உங்களுக்கு புத்துணர்வையும் மகிழ்வையும் அளிக்கிறது.

GLAMOUR GIRL

GLAMOUR GIRL BEAUTY SOAP

இது ஒரு ராஸ் முரார்க்கா ஃபைனான்ஸ் லிமிடெட்டின் தயாரிப்பு.

---

தமிழ்நாடு விநியோகஸ்தர்கள் : ஏ.பி.சி. அசோசியேட்ஸ், 72, கங்காதரேஸ்வரர் கோயில் தெரு, புரசவாக்கம் சென்னை-7. சென்னை நகர ஸ்டாக்கிஸ்டுகள் : தாரிவால் எண்டர்பிரைசஸ், 60, தம்பு செட்டி தெரு, சென்னை-1 அம்ரா எண்டர்பிரைசஸ் 14, முதல் மெயின்ரோடு, சி.ஐ.டி.காலனி, சென்னை-4 தனலக்ஷ்மி எண்டர்பிரைசஸ் சென்னை-44 தூத்துக்குடி; பாண்டியன் ஸ்டோர்ஸ், V.E. தெரு நாகர்கோயில் : செந்தில் டிரேடர்ஸ், மாலட் அம்மாள் தெரு.

---

இதர நகரங்களுக்கு ஸ்டாக்கிஸ்டுகள் தேவை.



அரசு உயர்நிலைப் பள்ளி

# இப்படியும் ஒரு பள்ளி; இப்படியும் ஒரு கிராமம்!

"ஸார், எங்களூரிலுள்ள அரசு உயர் நிலைப் பள்ளியில் ஒன்று முதல் பத்து வரை மாணவ–மாணவிகள் தரையில் உட்கார்ந்து தான் படிக்கிறார்கள். பெஞ்சு வசதிகூட இல்லாத ஓர் அரசு உயர்நிலைப் பள்ளியை தமிழ்நாட்டிலேயே இங்கிட்டுத்தான் நீங்கள் பார்க்கலாம்.....!''

— இதுதான் திருவாரூரிலிருந்து சுமார் பத்து கி.மீ. தொலைவிலுள்ள நீலப்பாடிக்கு நாங்கள் சென்றபோது அங்குள்ள இளைஞர்கள் சிலர் முதலில் சொன்ன குறைபாடு.

ஆச்சரியம் மேலிட, ''அப்பள்ளிக்கூடத்தைக் காட்டுங்கள்.....!'' என்று சொன்னதும், இளைஞர் ஆர். காளீஸ்வரன் எங்களை அப்பள்ளிக்கு அழைத்துச் சென்றார்.

முன்பு பயிற்சிப் பள்ளியாக இயங்கி வந்தது 1975ல் அரசு உயர்நிலைப் பள்ளியாகமாற்றப்பட்டது. 1977ல்நாகப்பட்டினத்தில் வீசிய புயலால், பழைய கட்டிடங்கள் சரிய, 1978ல் பொதுப்பணித் துறை புயல் நிவாரணப் பணியாகப் புதிய கட்டிடம் கட்டிக் கொடுத்தது. அப்போதைய நிதி அமைச்சரின் செயலராக இருந்த நாஞ்சில் வின்சென்ட் 27.8.1978ல் புதிய கட்டிடத்தைத் திறந்து வைத்திருக்கிறார். ஆனால் மாணவர்கள் படிப்பதற்கு வசதியாக, பெஞ்சு வசதி உள்ளதா என்று யாரும் கவனித்ததாகத் தெரியவில்லை!

இந்த அரசை நம்பினால் பலனில்லை என்பதாலோ என்னவோ பெற்றோர்–ஆசிரியர் சங்கம், எஸ்.எஸ்.எல்.சி. யை முடித்துவிட்டு டி.சி. வாங்கப் போகும் மாணவ–மாணவிகளிடம் பத்து ரூபாய், பதினைந்து ரூபாய் என்று வசூலித்துக் க' .ந்த ஆண்டு பத்தாவது வகுப்பில் மட்டும் பெஞ்சு வாங்கிப் போட்டிருக்கிறார்கள். மற்றவகுப்புமாணவ–மாணவிகள் எல்லாம் இன்னமும் தரையில் தான் உட்கார்ந்து படிக்கிறார்கள்.

"இங்கே சுமார் ஐந்நூறு மாணவ–மாணவிகள் படிக்கிறார்கள். ஒரு தடவை, இந்த வழியாக முதல்வர் எம்.ஜி.ஆர். சென்றபோது, அவருடைய காரை நிறுத்தி, அவரிடமே எங்கள் பள்ளியின் நிலைமையை எடுத்துச் சொல்லிப் பார்த்துவிட்டோம். இதுவரை ஒரு பயனுமில்லை! இது மட்டும்தானா?



• பூட்டியே கிடக்கும் தாய்–சேய் நல விடுதி



• சிதைந்து கிடக்கும் மூங்கில் பாலம்

• காளீஸ்வரன்  • திருஞானசம்பந்தம்



"இன்னும் சில விஷயங்கள் இருக்கின்றன. அவற்றையும் பார்க்கலாம், வாருங்கள்" என்று அழைத்துச் சென்ற காளீஸ்வரனைப் பின்தொடர்ந்தோம்.

ஓரிடத்தில் ஒரு பழைய கட்டிடம் காணப்பட்டது. "இது என்ன கட்டிடம்....?" என்று நாங்கள் கேட்பதற்கு முன்பே, "இதுதான் ஸார், தாய்—சேய் நலவிடுதி! மூன்று வருடங்களுக்கு முன்பு அமைச்சர் கே.ஏ. கிருஷ்ணசாமி திறந்து வைத்துவிட்டுப் போனார். அப்புறம் இன்றுவரை மூடியே கிடக்கின்றது. தற்போது இதன் ஒரு பகுதியை பால்வாடியாக (பாலர் பள்ளி)ப் பயன்படுத்துகின்றனர்!" என்று சலித்துப் போய்ச் சொன்னார் அவர்.

இளைஞர் நற்பணி மன்றச் செயலர், திருஞான சம்பந்தம் என்ற இளைஞர், "எங்க ஊரையும் மற்றொரு ஊரான இரவாஞ்சியையும் இணைக்கிற பாலம் ஒன்றை நீங்கள் கட்டாயம் பார்த்துப் படம் பிடித்து எழுதணும் ஸார்!" என்றார்.

இக்கிராமத்தில், அப்படி என்ன புதுமையான பாலம் இருக்கின்றது? அதையும் பார்த்துவிடலாமே என்ற எண்ணத்தில், இளைஞர்கள் பட்டாளத்தோடு சென்றோம்.

சுமார் இருபதடி அகலம் கொண்ட ஆற்றின் இரு கரைகளின் மீதும், வெறும் மூங்கில்களை வெட்டிக் கட்டிப் பாலமாகப் போட்டிருக்கிறார்கள்.

"இந்த மூங்கில் பாலத்தில் நடப்பவர்கள் உயிரைக் கையில் பிடித்துக் கொண்டுதான் நடக்க வேண்டும். அந்த அளவுக்குச் சிதைந்து போயிருக்கிறது. மழைக்காலத்தில் இதையும் தண்ணீர் இழுத்துச் சென்று விடும். அதன் பிறகுதான் புதிதாகச் செய்து போடுவார்கள்! எங்கள் ஊரோடு மூன்று நான்கு சின்னஞ் சிறு கிராமங்களையும் இப்பாலம் தான் இணைக்கின்றது. இப்பகுதியில் வாழும் சுமார் மூவாயிரம் பேருக்கு அத்தியாவசியமாகத் தேவைப்படும் இச்சிறு பாலத்தைக் கட்டித் தராமல் இருக்கிறார்கள்....!" என்றார், அப்பாலத்தின் வழியாகத் தினசரி சென்று கொண்டிருக்கும் ஒரு நடுத்தர வயதானவர்.

கடைசியாக நாங்கள் அந்த ஊரை விட்டுக் கிளம்பியபோது இந்தியாவின் ஜீவன் எந்தக் கிராமங்களில் இருப்பதாகக் காந்தியடிகள் சொன்னாரோ அந்தக் கிராமங்களின் கதி இதுதானா? அப்படியானால் இந்தியாவின் ஜீவன் சித்திரவதைப்பட்டுக் கொண்டேதான் இருக்கிறதா என்ற துக்கம்தான் எங்கள் நெஞ்சை அடைத்தது.

கட்டுரை, படங்கள்: **பானுமணாளன்**

# அடுத்த இதழில்...

# அஸ்ஸாம் முதல்வர் மஹந்தா

## சிறப்புப் பேட்டி!



ஸ்ரீரங்கம் இராஜகோபுரம்
புனருத்தாரண நிதி
பம்பாய் கமிட்டி

C/o. ஷண்முகானந்தா சபா, 292, ஜே. ஒய். மார்க், பம்பாய்-400 022

இராயகோபுரத்திலிருந்து இராஜகோபுரம் அழகு வடிவாகச் செதுக்கப்பட்டது. நீண்ட நாள் கனவு நிறைவேறுகிறது.

பகீரதன், தன் நீண்ட தவத்தினால் கங்கையைப் பூமிக்குக் கொணர்வதாகச் சபதம் எடுத்தான்.

அஹோபில மடத்தின் 44 வது ஜீயர் சுவாமிகள் தங்கள் தொண்ணூற்றோராவது முதிர்ந்த வயதில் பெருமுயற்சியின் காரணமாக இந்தியாவின் மிக உயரமான 236 அடிகள் உயரமான ஸ்ரீரங்கம் இராஜகோபுரத்தை நிர்மாணிக்கும் பணியில் ஈடுபட்டிருக்கிறார். மிகப் புராதனமான ஸ்ரீரங்கம், ஸ்ரீரங்கநாத ஸ்வாமி கோவில் ஏழு பிராகாரமும் இருபத்தொன்று கோபுரங்களும் கொண்டது.

தமிழகம், கேரளா, கர்னாடகா, ஆந்திரா மற்றும் மஹாராஷ்ட்ரா அரசுகள் போட்டிப் போட்டுக் கொண்டு மூன்று கோடி ரூபாய்க்கும் அதிகமாக இந்தப் புனிதத் திருப்பணிக்கு நன்கொடை வழங்கி இருக்கின்றன.

இப்புனிதத் திருப்பணி பூரணமாக நிறைவேற சங்கீத கலாநிதி திருமதி எம். எஸ். சுப்புலட்சுமி அவர்கள் உதவி நிதிக் கச்சேரி செய்ய இசைந்துள்ளார்கள்.

24.5.86 சனிக்கிழமை மாலை 6.30 க்கு பம்பாய் ஷண்முகானந்தா ஹாலில் இன்னிசைக் கச்சேரி நடைபெறும்.

திருமதி எம். எஸ். சுப்புலட்சுமி — பாட்டு
திருமதி ராதா விஸ்வநாதன் அவர்கள் உடன் பாடுகிறார்கள்
திரு வி. வி. ரவி — வயலின்
,, கே. வி. பிரசாத் — மிருதங்கம்
,, டி. ஹெச். விநாயக்ராம் — கடம்
,, பெங்களூர் ராமாச்சார் — கஞ்சிரா

மேதகு உபராஷ்ட்ரபதி ஸ்ரீ ஆர். வெங்கட்ராமன் அவர்கள் முன்னிலையில் கச்சேரி நடைபெறும்.

டிக்கெட்டுகள்: தரை ரூ. 100/—, ரூ. 50/—, ரூ. 25/—.
முதல் பால்கனி ரூ. 15/—.
இரண்டாவது பால்கனி ரூ. 10/—.

நன்கொடைகளுக்கு வருமான வரிச் சட்டம் 80-G யிலிருந்து விலக்கு அளிக்கப்படுகிறது. நன்கொடைகளை Cheque மூலமாக அனுப்ப வேண்டிய முகவரி:

Srirangam Rajagopuram Temple Renovation Fund,
Bombay Committee,
C/o. Shanmukhananda Sabha,
Sion (East), Bombay-400 022.

இந்தத் தெய்வீகத் திருப்பணிக்கு உதவி, இப்புனித கைங்கரியத்தில் பங்கேற்று இறைவனின் அருளுக்குப் பாத்திரராகுங்கள்.

எஸ். சேஷாத்திரி,
ஆர். கண்ணன்,
பொதுக் காரியதரிசிகள்.

பஞ்சாப் ஆட்சி

பயங்கர வாதிகள்

நம்பிக்கைத் துரோகிகள்

பர்னாலா

அடேயப்பா! முஸ்லிம் பெண்கள் சட்டத்துக்கு எவ்வளவு ஆதரவு!

அ.தி.மு.க.

இ. காங்கிரஸ்








**கல்கி**

1986 மே 18
மலர் 44 இதழ் 42
அக்ஷய வைகாசி 4



# பிரதமர் காட்டிய பிடிவாதம்!

**அ**ப்படி என்ன தலைபோகிற அவசரம், அள்ளித் தெளித்த அவசரக் கோலமாக முஸ்லிம் பெண்கள் மசோதாவைத் தயாரித்துச் சூறாவளி வேகத்தில் அதைச் சட்டமாகவும் நிறைவேற்றி வைக்க? நாடு தழுவிய அளவில் விவாதம் நடந்தால் என்ன? நாடாளுமன்றத்தின் செலக்ட் கமிட்டி பரிசீலனைக்கு விட்டால்தான் என்ன? சற்றுக் கால தாமதமானால் என்ன குடிமுழுகிப் போய்விடும்?

ஷா பானு வழக்கில் உச்சநீதி மன்றம், அவருக்கு விவாகரத்துக்குப் பிறகு நாட்டின் பொதுச் சட்டப்படி ஜீவனாம்சம் பெறும் உரிமை உள்ளது என்று தீர்ப்பளித்தது. இதையொட்டி முஸ்லிம் சமூகத்தினரிடையே சம்பிரதாயவாதிகள் கலவரமடைந்தனர். 'முஸ்லிம்கள் விஷயத்தில் முஸ்லிம் மதச் சட்டங்கள் மட்டுமே செல்லுபடியாக வேண்டும்' என்பது அவர்கள் கருத்து. ஆனால் முற்போக்குச் சிந்தனையுள்ள ஏராளமான முஸ்லிம்கள் உள்பட, நாட்டின் நல்லறிஞர்கள், குறிப்பாக சமத்துவம் கோரும் பெண்கள், 'நாட்டின் பொதுச்சட்டத்தின்படி முஸ்லிம் பெண்கள் விரும்பினால் — விரும்பினால் மட்டுமே — நீதி பெற வாய்ப்பு இருக்க வேண்டும்; அந்த உரிமை அவர்களுக்கு மறுக்கப்படக் கூடாது' என்றனர்.

ஆனால் ராஜீவ் இவர்கள் கருத்தைக் காதில் வாங்கிக் கொள்ளவே இல்லை! ஆரம்பத்திலிருந்தே ராஜீவ் இந்த விஷயத்தில் தேவையில்லாத அவசரத்தையும் அர்த்தமற்ற பரபரப்பையும் காட்டி வந்திருக்கிறார். 'சிறுபான்மையினர் நலனை(?) இந்த அரசு கவனிக்காமல் இருக்க முடியாது' என்று கூறிக் கொண்டு அள்ளித் தெளித்த அவசரக் கோலமாக ஒரு மசோதாவை உருவாக்கினார். அர்த்த ராத்திரியில் நாடாளுமன்ற எதிர்க்கட்சித் தலைவர்களை எழுப்பி அழைத்துவரச் செய்து மசோதாவை உடனே படித்துப் பார்த்துக் கருத்துக் கூறச் சொன்னார்! அதே மூச்சில் அதை நாடாளுமன்றத்திலும் மாநிலங்கள் அவையிலும் வைத்துச் சட்டமாக நிறைவேற்றியும் விட்டார். நள்ளிரவில் நாடாளுமன்றத்தில் ஒரு கறுப்புச் சட்டம் நிறைவேறியுள்ளது!

செயல்திறன் வேண்டும்தான்; ஆனால் அதில் செய்நேர்த்தியும் இருக்க வேண்டும் அல்லவா? இப்படி ஜெட் வேகம் காட்டியதற்கு வோட்டுக்கள் மீது அவருக்கு ஒரு கண் இருந்தது காரணமாக இருக்கலாம். சில உப தேர்தல்களில் இ. காங்கிரஸ் அடைந்த தோல்விகள் அவரைக் கலங்கச் செய்திருக்கலாம். இன்னும் ஒரு காரணத்தையும் ஊகிக்க முடிகிறது. இதனைப் 'பிற்போக்குச் சட்டம்' என்று கூறி முஸ்லிம் அமைச்சர் ஆரிஃப் முகமதுகான் ராஜினாமா செய்தது பிரதமரைக் குத்திக் காட்டுவதாக அமைந்து, 'நம்மைத் தட்டிக் கேட்கலாயிற்றா?' என்று அவருடைய தற்பெருமை உணர்வை விழித்தெழச் செய்திருக்கலாம். இ. காங்கிரஸுக்குள்ளேயே பிரணாப் முகர்ஜி போன்றவர்கள் மனச்சாட்சிப்படி வோட்டளிக்க உரிமை கோரியது பிரதமரிடம் ஒரு பிடிவாதத்தை உசுப்பிவிட்டிருக்கலாம். காரணம் எதுவாயினும் சரி, முன்னாள் சுப்ரீம் கோர்ட் நீதிபதி வி. ஆர். கிருஷ்ணய்யர் போன்ற சட்ட மேதைகள், 'இது தவறு' என்று சுட்டிக்காட்டிய பின்னரும், எதிர்க்கட்சியினர் ஒட்டுமொத்தமாக எதிர்ப்புத் தெரிவித்த பிறகும், பெண் உரிமைக் கழக மாதர்கள் தங்கள் கால்கைகளைச் சங்கிலிகளால் பிணைத்துக் கொண்டு நாடாளுமன்றம் எதிரே ஆர்ப்பாட்டம் நடத்திய பிறகும் ராஜீவ் நிதானம் காட்டாமல், புயல் வேகத்தில் செயல்பட்டு, நாடாளுமன்றத்தில் ரோட்-இஞ்ஜின் பெரும்பான்மையைப் பயன்படுத்தி எதிர்ப்பை நசுக்கியதை 'வெட்கக்கேடு' என்றுதான் வர்ணிக்க வேண்டும். இந்தச் சட்டத்துக்கு ஆதரவாக வோட்டுப் போட்ட பல இ. காங்கிரஸ் எம். பிக்கள் 'சாட்டை'க்குப் பயந்துதான் வோட்டுப் போட்டார்களே தவிர, மனச்சாட்சிக்கு அஞ்சி அல்ல. அ. தி. மு. க. போன்ற தோழமைக் கட்சிகளும் சட்டத்தைக் கண்டித்த பிறகுதான் தார்மீக(!) ஆதரவு தந்துள்ளன.

*21 ஆம் நூற்றாண்டு பற்றிப் பேசும் ராஜீவ் காந்தி இந்திய முஸ்லிம் பெண்களை மட்டும் 18 ஆம் நூற்றாண்டிலேயே வைத்திருக்க நினைப்பது ஆச்சரியம்!*

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்.

# பளபளக்கும் பட்டும்



"எத்தனையோ பெண்களைச் சந்தோஷப்படுத்துகிற விலையுயர்ந்த பட்டுச் சேலைகளை நெய்து கொண்டிருக்கும் உங்களுக்கு, ஒரு நாளாவது அப்படிப்பட்ட விலையுயர்ந்த சேலைகளில் ஒன்றைக் கட்டிப்பார்க்க வேண்டும் என்று ஆசை வந்தது இல்லையாதா?" — இந்தக் கேள்வியைத் தறியில் உட்கார்ந்து பட்டு நெசவு செய்து கொண்டிருந்த கௌரி என்ற பெண்ணிடம் கேட்டோம்.

"ஆசை வராமெ எப்படீங்க இருக்கும்? ஆனா அதுக்கும் குடுத்து வெச்சிருக்க வேண்டாங்களா? வர்ற சம்பாத்தியத்துலெ குடும்பத்தெக் கடனில்லாம நடத்துனாலே போதுமுங்க! அப்படிச் சிக்கனமா இருந்தாக்கூட கடனாயிப் போவுதுங்க....." என்றார்.

அதற்குள் தொட்டிலில் இருந்த கௌரியின் கைக்குழந்தை அழவே அவர் உள்ளே சென்றுவிட்டார். எனவே, கௌரியின் கணவர் ராஜாராமனிடம், "உங்கள் வருமானம் எவ்வளவு?" என்று கேட்டோம்.

"வாரத்துக்கு மூணு செறும் நெய்வோங்க. அதாவது மாசத்துக்கு ரெண்டு சேலை நெய்வோம். அதுக்குச் சராசரியா மாசம் எண்ணூறு ரூபாய் கெடச்சாலே பெரிசுங்க..."

"மாதம் எண்ணூறு ரூபாய் என்பது நல்ல வருமானம்தானே?"

"நீங்க ஆளுக்கு எண்ணூறு ரூபா வருமானம் வரும்னு தப்புக் கணக்குப் போட்டுட்டீங்க. அப்படியில்லீங்க. மாசத்துக்கு ரெண்டு சேலை நெய்யணும்னா நானும் என் சம்சாரமும் சேர்ந்து நெசவு பண்ணினாத் தாங்க முடியும். அதோட கூடத் தார் சுத்தற வேலைகளைச் செய்யறதுக்கு ஒரு சித்தாளும் தேவைப்படும். இப்படி மூணு பேரும் சேர்ந்து மாசம் பூரா கஷ்டப்பட்டாத்தாங்க எண்ணூறு ரூபாயைப் பார்க்க முடியும்! அப்படிக் கணக்குப் போட்டா சித்தாளுக்கு நூறு ரூவான்னு வெச்சுக்கிட்டா பெரியவங்க ரெண்டு பேருக்கும் ஆளுக்குச் சராசரியா முந்நூத்தம்பது ரூபாதாங்களே வருது...."

"அப்படீன்னு நீங்க ஒரு சித்தாளை வேலைக்கு வெச்சிருக்கீங்களா?"

"இல்லீங்க. அந்த வேலையை என் சம்சாரமேதாங்க செஞ்சு சமாளிக்குது. இல்லீன்னா ரொம்பக் கஷ்டமாயிடுங்க...."

"பொதுவாக நீங்கள் காலையில் எத்தனை மணியிலிருந்து மாலை எத்தனை மணிவரை நெசவு வேலை செய்வீர்கள்?"

"ஆபீஸ் போறவங்க மாதிரி நாங்க கணக்குப் பார்த்து வேலை செஞ்சா அம்போதாங்க. இந்தக் கூலியும் கெடைக்காது. காலையிலே ஆறு மணிக்கு ஆரம்பிச்சா



கௌரி: "எனக்கு ஒரு பட்டுப் பாவாடை கூட இல்லீங்க..."

# பரிதவிக்கும் நெசவாளர்களும்

ராத்திரி பதினொரு மணி வரைக்குமாவது நெசவு பண்ணினாத்தாங்க முடியும்!''

''எப்போதும் இந்த வேலை இருக்கும்: இல்லையா? ஒருவேளை நூல் பற்றாக்குறை அது இது என்று வருடத்தில் சில மாதங்களுக்கு வேலையில்லாமல் போய் விடுமா?''

''அப்படியெல்லாம் போவாதுங்க. ஆனா மழைக்காலம் வந்துட்டா அந்த மூணு மாசமும் நெசவு பண்ண முடியாதுங்க. ஏன்னா, காத்துலெ ஈரம் ஜாஸ்தியா இருக்கிறதாலே நெசவு பண்ணும்போது நூல் படிமானம் சரியா வராதுங்க. அதனாலெ அந்த மூணு மாசமும் சும்மாதாங்க இருக்க வேண்டியிருக்கும்!''

''அப்படியானால் கஷ்டமாச்சே! அந்தச் சமயத்தில் வருமானத்திற்கு என்ன செய்வீர்கள்?''

''கடன் கிடன் வாங்கித்தாங்க சமாளிப்போம். பிற்பாடு கொஞ்சம் கொஞ்சமாக அந்தக் கடனை அடைப்போம். பிறகு மழைக்காலம் வந்தா வாங்குவோம். இப்படியே தாங்க வண்டி ஓடிக்கிட்டிருக்குது....''

''பட்டுச் சேலைகள் என்பது எழுநூறு ரூபாயிலிருந்து பத்தாயிரம் ரூபாய் வரைக்கும் இருக்கிறதாகச் சொல்கிறார்களே! அப்படியானால் அதிக விலையுள்ள சேலைகளை நெய்யும்போது, அதிகமான கூலியும் கிடைக்குமல்லவா?''

''பட்டுப் புடவையின் விலைங்கிறது அதிலுள்ள ஜரிகையை வெச்சுத்தாங்க. அப்படி அதிக ஜரிகையுள்ள சேலைங்களை நெய்யும் போது கூலியும் அதிகமாக் கெடைக்கும்கிறது வாஸ்தவம் தாங்க. ஆனா, ஜரிகை வேலைப்பாடு அதிகமாக அதிகமாக நெய்யறவேலை நேரமும் அதிகமாவுங்களே! அதனாலெ கூலி லெ பெரிசா எந்த மாற்றமும் இருக்காதுங்க.....'' என்றார் ராஜாராமன்.





இவரைப் போல் சுமார் ஐயாயிரம் சௌராஷ்டிரக் குடும்பங்கள், கும்பகோணத்திற்கு அருகிலுள்ள திருபுவனம் ஊரில் பட்டு நெசவில் ஈடுபட்டிருக்கின்றன. அத்தனை தறிகளுக்கும் ஏறத்தாழ ஒரு சித்தாள் அவசியம் என்பதால், இந்த நெசவுத் தொழிலில் ஈடுபட்டுள்ள எந்த வீட்டிலுள்ள சிறுவர் சிறுமியரும் முழுமையாகப் பள்ளிக்கூடம் செல்ல முடியவில்லை. எல்லோரும் இரண்டாவது மூன்றாவது என்று படித்தவுடனேயே பள்ளிக்கூடத்தை விட்டுவிட்டுத் தறிக்கு வந்து விடுகிறார்கள். இதை நாங்கள் சென்று பார்த்த ஒவ்வொரு குடும்பத்திலும் கண்கூடாகக் கண்டோம்.

ஒரு வீட்டுக்குச் சென்றபோது, மீரா என்ற பதினாறு வயதுப் பெண் தாப்பாக் கட்டையும் கையுமாகப் பட்டு நூலை நெசவுக்காகச் சுற்றிக்கொண்டிருந்தார். அந்தப் பெண்ணும் தறி வேலையில் சித்தாள் வேலைக்காகப் பள்ளிப் படிப்பைப் பாதியில் விட்டுவிட்டவர்தான். பேசிக் கொண்டிருந்தபோது, அந்தப் பெண்ணுக்கு இதுவரை ஒரு பட்டுப் பாவாடை கூட இல்லை என்பதுதான் பள்ளிப் படிப்பை விட்டதைவிட வருத்தம் என்று உணர முடிந்தது. பெற்றோரிடம் பேசிய போது, ''கூழோ, கஞ்சியோ வேளாவேளைக்

ராஜாராமன் சீனிவாசன்



தக் கொள்ள கொடுத்தன்னு சந்தோஷப்பட்டுக்க வேண்டியதுதாங்க....!'' என்றார்கள்.

இப்படிப் பட்டுப் புடைவையின் ஒவ்வோர் இழையிலும் ஆயிரக்கணக்கான ஆண்கள், பெண்கள், சிறுவர், சிறுமியர் என்று அனைவரின் வேர்வைத் துளியும் கலந்துதான் நெய்யப்படுகிறது. அப்படியிருந்தும் நெய்யப்பட்ட பட்டுப் புடைவைகளை விற்பனை செய்வதில் அங்கு ஏகப்பட்ட குளறுபடி; நஷ்டம்!

திருபுவனத்திலுள்ள 'திருபுவனம் பட்டு கூட்டுறவுச் சங்கம்' என்ற சங்கத்தைத் தவிர மற்ற எந்தச் சங்கமும் லாபகரமாக இயங்கவில்லையாம். இந்தச் சங்கத்தின் தலைவர் மட்டும் சங்க உறுப்பினர்களாலேயே தேர்தல் முறையில் தேர்ந்தெடுக்கப்படுவதால் திறமையானவர்கள் பொறுப்புக்கு வருகிறார்களென்றும் அதனால்ஒழுங்காகநடப்பதோடு, லாபமும் ஈட்டித் தருவதாகச் சொன்னார்கள். ஆனால், ''மற்ற சங்கங்களில் அப்படியில்லை. அதன் தலைவர்களையெல்லாம் அரசாங்கமே நேரடியாக நியமிப்பதால் திறமையில்லாதவர்கள் பொறுப்புக்கு வந்து சங்கங்களையே நஷ்டமடையச் செய்து கொண்டிருக்கிறார்கள். அதனால் அந்தச் சங்கங்களைச் சார்ந்திருக்கும் பட்டு நெசவாளர்களும் பாதிக்கப்படுகிறார்கள்!'' என்றார் திருபுவனம் பேரூராட்சியின் தலைவர் எம்.ஜி. சுந்தரமூர்த்தி.

திருபுவனம் பட்டு பிரசித்தி பெற்றது என்பதால் தினசரி வெளியூர்களிலிருந்து பட்டு வாங்க வருபவர்களின் எண்ணிக்கை சராசரி ஐநூறுவது இருக்கும். அப்படியிருந்தும் திருபுவனத்தில் தங்குவதற்கென்று ஒரு லாட்ஜ்கூட இல்லை. அதுதான் ஒழியட்டும்; பக்கத்திலுள்ள கும்பகோணத்தில் தங்கிக் கொண்டால் போகிறது என்றாலும் வந்து போகிற வெளியூர்க்காரர்களின் அவசரத்திற்குஒருபொதுக்கழிப்பிடம்கூட இல்லாததுதான் அசிங்கம்!

''சில மாதங்களுக்கு முன்பு பம்பாயில் நடந்த காங்கிரஸ் நூற்றாண்டு விழாவின் போது கருப்பையா மூப்பனார் அவர்கள் பிரதமர் ராஜீவுக்கு ஒரு பொன்னாடை (நிஜமாகவே பொன்னாடைதான். விலைபதிமூன்றாயிரம்!) போர்த்தினார். அதை அழகுற நெய்து கொடுத்தது எங்கள் திருபுவனம் பட்டு நெசவாளர்கள்தான். அந்தப் பொன்னாடையில் எங்கள் நெசவாளர்களின் திறமை மட்டுமல்ல; ஆழ்ந்து பார்த்தால் எங்கள் சோகமும் சேர்த்தே நெய்யப்பட்டிருப்பதைப் புரிந்து கொள்ளலாம்....'' என்றார் திருபுவனம் கன்ஸ்யூமர் கவுன்ஸிலின் பொதுச் செயலாளரான கே. சீனிவாசன்.

ஆம்; அவர் சொன்னது உண்மைதான். ஆனால் நெய்பவர்களின் துயரம் உடுத்துபவர்களுக்கு எங்கே தெரியப் போகிறது என்பதுதான் இந்தத் தேசத்தின் துரதிருஷ்டம்!

— பிரின்ஸ்.

அட்டையில்..... திருபுவனம் பட்டு கூட்டுறவுச் சங்கத்தின் விற்பனைப் பகுதி.

வண்ணப்படம்: மணி

# கலையழகோடு ஒரு ரேஷன் கடை!



ஒரத்த நாட்டில் 'சவுக்கண்டி' யோடு கூடுதலாக இன்னொரு விசேஷம். இதுவும் பழைய காலச் சமாச்சாரம்தான். செங்கற்களாலும் சுண்ணாம்பாலும் எழுப்பப்பட்ட நுணுக்கமான வேலைப்பாடான மண்டபம் ஒன்று பஸ் ஸ்டாண்ட் ஓரமாக இருக்கிறது. தூண்கள் வெகு நேர்த்தி. சிறு சிற்பத்தில்கூட என்னவொரு வேலைப்பாடு! ஆனால் இப்படியோர் அழகான மண்டபத்தில் இப்போது நடப்பது என்ன என்கிறீர்களா? ரேஷன் கடை! சாமி சிலைகளுக்கிடையில் மூட்டைகள் அடுக்கினபடி கிடக்கின்றன. எத்தனையோ ரேஷன் கடைகளுக்கிடையில் 'அழகான' ரேஷன் கடை இதுவாகத்தானிருக்கும்!

Amulspray
Milk food for infants
Enriched with Vitamins and Iron
Breast feeding is best for your child

## குழந்தைகளுக்கான அமுல்ஸ்ப்ரே பாலுணவு இப்போது நருவிசான புதிய டிசைனிலே வருகிறது*

ஸ்ப்ரே-ட்ரை செய்முறைப்படி தயாரிக்கப்பட்டு, வைட்டமின்களும் இரும்புச் சத்தும் சேர்த்து வளமூட்டப்பட்ட அமுல்ஸ்ப்ரே, இந்தியாவில் எங்குமுள்ள தாய்மார்களால் மிகவும் விரும்பப்படும் குழந்தைப் பாலுணவு — உங்கள் குழந்தைக்கு அமுல்ஸ்ப்ரே துவங்கு முன்பாக உங்கள் டாக்டரிடமோ அல்லது ஆரோக்கிய நலம் காக்கும் ஊழியரிடமோ ஆலோசனை கேட்டுப் பெறுங்கள். மறவாதீர்கள், உங்கள் பாப்பாவின் உடல் நலம் கெடாதிருக்க, டின் மீதுள்ள வழிமுறைக் குறிப்புகளைக் கவனமாகப் பின்பற்றுங்கள்.

# அமுல்ஸ்ப்ரே

குழந்தைக்குத் தாய்ப்பால் தான் சிறந்தது.

* அரசாங்க விதிமுறைகளின்படி, டின் மீதிருந்து பாப்பாவின் படம் அகற்றப்பட்டு, வழிமுறைக் குறிப்புகளில் இதர மாற்றங்களும் செய்யப்பட்டுள்ளன.



விற்பனைக்கு விடுப்போர்:
குஜராத் கோ-ஆப்பரேடிவ் மில்க் மார்க்கெட்டிங் ஃபெடரேஷன் லிமிடெட், தபால் பெட்டி எண் 10, ஆனந்த் 388 001, குஜராத் மாநிலம்.





# நெருப்பாக நீ

நந்தகுமாரின் தாய் புவனாவை, இன்பா சாப்பாட்டு மேஜையில்தான் சந்திக்கிறாள்.

காலை நேரச் சிற்றுண்டி — அந்த டைனிங் ஹாலை மிகச் சுறுசுறுப்புடன் இயங்க வைத்துக் கொண்டிருக்கிறது.

இன்பா, இன்னமும் பிரமிப்பில் இருந்து மீளவில்லை... தனது வியப்பை நந்துவிடம் வாய் விட்டுச் சொல்கிறாள்....

''உங்க பங்களா, ஏதோ அரண்மனை மாதிரி இருக்கு... ஒவ்வொரு அங்குலமும் என்னைத் திகைக்க வைக்கிறது.... நந்து.... இத்தனையும் உன் அப்பா சம்பாதிச்சதா?''

''எனக்கு நினைவு தெரிஞ்சு அவர் ஒத்தை ரூபா கூடச் சம்பாதிச்சதில்லே! இதெல்லாம் பூர்வீக சொத்து. எங்க அப்பாவோட மூதாதையரும் ஜமீன் வம்சத்துல வந்தவங்க. எங்க பெரியம்மாவும் பெரிய ஜமீன்தார் ஒருத்தரோட ஒரே மக.... ரெண்டும் சேர்ந்துடுச்சு! பார்க்கப் போனா, இந்தப் பங்களா எங்க பெரியம்மாவுக்குச் சீரா, அவங்க பிறந்த வீட்டில் கொடுத்தது.....

டைனிங் ஹாலில், நந்தகுமாரின் தாய் புவனாவின் வருகைக்காகக் காத்திருந்தபோது, இன்பாவிடம் சொல்கிறான் நந்து.

அந்தக் காலத்திய வேலைப்பாடுகளுடன் கூடிய மேஜை, கடைசல் பிடித்த கருந்தேக்கு மரத்தில், நடுநடுவே சித்திர வேலைப்பாடுகளில் தந்தம் பதித்து....

அத்தனை பெரிய மேஜையை அவள் இதுவரையில் பார்த்ததில்லை.... மேஜையைச் சுற்றிப் பத்துப் பதினைந்து நாற்காலிகள்.

வெள்ளித் தட்டுகளும், தம்ளர்களும், தண்ணீர் ஜாடிகளும் ஆடம்பர வாழ்க்கைக்கு ஓர் எடுத்துக் காட்டாக....

அத்தனை பெரிய மேஜையில் ஐந்து தட்டுகள்தான் வைக்கப்பட்டிருந்தன.

இன்பா எண்ணிப் பார்க்கிறாள்.

தன்னையும் சேர்த்து எண்ணினால், நந்து, அவன் அப்பா, அம்மா.... நாலு பேர்தானே...

'ஒரு வேளை, மூளை சரியில்லாத அண்ணனும் இங்கு சாப்பிட வருவானோ....'

அவள், நந்துவின் கையைச் சுரண்டுகிறாள்...

''என்ன இன்பா....''

''அஞ்சாவது தட்டு யாருக்கு?''

''நான் சொல்லலே.... இந்தக் குடும்பத்து டாக்டர்.... தினமும் அம்மாவை 'செக் அப்' செய்ய வருவாருன்னு... அப்பா அவரையும் 'பிரேக் ஃபாஸ்ட்'டுக்குக் கூப்பிட்டிருக்காராம்.''

இன்பா, நகத்தைக் கடித்தபடி காத்திருக்க —

அடுத்த ஐந்தாவது நிமிஷத்தில், அந்த ஹாலில் மிக மெல்லிய நறுமணம் கமழுகிறது.

நந்து, கண்களைச் சிமிட்டியபடி அவளிடம் சொல்கிறான்.

''அம்மா வர்றா....''

ஆனால், முதலில் வந்ததென்னவோ ஐந்தடிக்கு மேல் வளராத — திடித்த — மஞ்சள் கலந்த — உருண்டையான மனிதர் தான்.

கையில் ஸ்டெதஸ்கோப் மட்டும் இல்லாமல் இருந்தால் அவரை, 'டாக்டர்' என்று சத்தியம் செய்தால்கூட இன்பா நம்பியிருக்க மாட்டாள்.

ஜரிகை வேஷ்டி, முழுக்கை ஷர்ட்; நெற்றியில் மிகச் சின்னதாக ஜவ்வாதுப் பொட்டு; வழுக்கைத் தலை; மெல்லிய தங்க பிரேம் போட்ட மூக்குக் கண்ணாடி.... தளதளவென நடக்கும்போது குலுங்கும் கன்னங்கள்....

மொத்தத்தில்கோயம்புத்தூரிலிருந்துவந்த சினிமாப் பட முதலாளி போல இருந்தார்.

பின்னாலேயே இள ரோஜா நிறப் பட்டுப் புடைவையும், அதே நிற ரவிக்கையுமாய்ப் புவனா....

இன்பா, கண்கொட்டாமல் நந்துவின் தாயையே பார்க்கிறாள்.

இவளுக்கென்ன வயசு இருக்கும்.

பார்த்தால் முப்பத்தி ஐந்து வயசுக்கு மேல் மதிப்பிட முடியாது. ஆனால், 'தன் தாய்க்கு நாற்பத்தியெட்டு வயசு' என்று, ரயிலில் வரும்போது நந்து சொன்னது நினைவுக்கு வருகிறது.

நந்துவின் தந்தையும் அவளும் பக்கத்துப் பக்கத்தில்வரும்பொழுது அப்பாவும், பெண்ணும் போல் இருந்தது.

டாக்டர்தான் ஆர்ப்பாட்டமாய்ப் பேசுகிறார்...

''ஆங்.... என்ன நந்தகுமாரா, எப்படி இருக்கே? உனக்கென்ன.... ராஜா வீட்டுக் கன்னுக்குட்டி... இவதான் உன்ஃபிரண்டா, வெரிகுட்.... வெரிகுட்... உன் பேரென்ன...?''

''இன்பா... முழுப் பேர் இன்பவல்லி.''

''பலே பலே!''

அவர், புவனாவின் பக்கம் திரும்புகிறார்

''என்ன ஜமீன்தாரிணி. உங்க மகனோட சிநேகிதியைப் பார்த்தீங்களா...''

இன்பா, புவனாவைப் பார்த்துக் கைகுவிக்கிறாள்.

அவளிடமிருந்து பதிலுக்குச் சின்னதாய்த் தலையசைப்புத்தான்.

கர்வமோ...

பார்த்தால் அப்படித் தெரியவில்லையே. முகத்தில் கவலையை மீறிய பயம் தெரிந்தது.

தொலைவிலிருந்து பார்த்தபோது, பளீரென விளங்கிய முகத்தை கிட்டத்தில் பார்க்கையில்நிறைய மேக்கப்செய்துகொண்டிருப்பது தெரிகிறது....

எதுக்கு இத்தனை பவுடர் பூச்சு...

வயசைக் குறைச்சுக் காண்பிச்சுக்கறதுல அத்தனை அக்கறையா....

'ஒரு பிள்ளை அல்பாயுசுல போயிட்டான். ஒரு பிள்ளை பைத்தியமா அறைக்குள்ளே அடைபட்டு இருக்கான். இத்தனையை அனுபவிச்சவளுக்கு இப்படி அலங்காரம் பண்ணிக்கப் பிடிக்குமோ....'

அவள் புவனாவைப் பற்றியே சிந்திக்க, டாக்டர் அவளது சிந்தனையைக் கலைக்கிறார்.

''என்ன யோசனை.... உட்காரலாமே...''

முதலில் லோகநாதனும், புவனாவும் அமர, புவனாவுக்கு நேர் எதிர் நாற்காலியில் டாக்டர் அமர.... இன்னொரு பக்கத்தில் நந்தகுமாரும் இன்பாவும் அமருகிறார்கள்.

புவனா, விழிகளை அந்தண்டை இந்தண்டை திருப்பாமல், குத்துப்பார்வையாய் டாக்டரையே பார்த்துக் கொண்டிருக்கிறாள்.

'புவனா — நல்ல களையான முகம்தான். சிறு வயதில் இன்னமும் அழகானவளாய் இருந்திருக்க வேண்டும். இப்பொழுது கண்ட மருந்துகளை உட்கொண்டு, அதிகம் படுத்துக் கொண்டே இருப்பதாலோ என்னவோ..... பூசினாற் போல் இருந்தாள்....





நெற்றியில் சற்றுப் பெரிய அளவு குங்குமம்.... காதிலும் கழுத்திலும் நிறைவான நகைகள்... கொஞ்சம் குட்டையாய்க் கை வைத்த ஜம்பர் பாணி ரவிக்கை.... தலை முடியை அழுந்தச் சீவி, கைக்கடக்கமாய் முடிந்திருந்தாள்....

இன்பாவின் பார்வையினால் அதிகம் சங்கடப்பட்டது நந்தகுமார்தான்...

''ஸ்... ஸ்....

அவன் தனது பாதத்தினால் அவளது பாதத்தை அழுந்த மிதிக்கிறான்.

திடுக்கிட்டுத் தன் எதிரே இருந்த தட்டுக்களைப் பார்க்கிறாள் இன்பா.

நெய் பளபளக்கும் சர்க்கரைப் பொங்கல், இட்லி, வடை, வெங்காய கொத்சு... மிளகாய்ப் பொடி.... சின்ன வெள்ளிக் கிண்ணத்தில் பொன் நிறத்தில் உருக்கிய நெய்...

அம்மாடி....காலைநேர உணவுக்கு இத்தனை முக்கியத்துவமா...

அவளது நினைப்பைப் புரிந்து கொண்டாற் போல் சிரிக்கிறார் லோகநாதன்.

''தினமும் ஸ்வீட் இருக்காது. இன்னிக்கு நீ வந்திருக்கிறதாலே ஸ்வீட் பண்ணச் சொன்னேன். இந்த மாதிரி சேர்ந்து சாப்பிட்டு ரொம்ப நாளாறது.... நம்ம புவனுவுக்கு இது மாதிரி 'கலகல'ன்னு சாப்பிடறது எல்லாம் ஒரு காலத்துல ரொம்பப் பிடிக்கும். அவனுக்காகவே நான், முந்தியெல்லாம் வீட்டுல நிறைய பார்ட்டி அரேஞ்ச் பண்ணுவேன். சாப்பிடும்மா....''

''அவங்க இன்னும் சாப்பிட ஆரம்பிக்கலையே!''



அவள், புவனாவைச் சுட்டிக் காட்டிச் சொல்ல, லோகநாதனின் நரைத்த மீசையையும் தாண்டிச் சின்னப் புன்னகை.

'பரவாயில்லே. பொண்ணு கசாமுசான்னு டிரஸ் பண்ணிட்டிருந்தாலும் மரியாதை தெரிஞ்சவளா இருக்கா....

அவர், புவனாவின் பக்கம் திரும்புகிறார்.

''சாப்பிடேன் புவனா....

அவள், ஸ்பூனைக் கையில் எடுத்துக் கொண்டு, டாக்டரைப் பார்க்க...

''உம்.... நீங்க இன்னிக்கு ரெண்டு இட்லி சாப்பிடலாம்... வடை, பொங்கல் நோ!''

நந்தகுமார், தாயைப் பரிதாபமாகப் பார்த்துவிட்டு, டாக்டரின் பக்கம் திரும்புகிறான்.

''பாவம் டாக்டர்... ஒரு விள்ளல் வடை, ஒரு ஸ்பூன் சர்க்கரைப் பொங்கல் சாப்பிட்டா என்ன, எப்பவோ ஒரு நாளைக்கு...''

''உங்க அம்மாவோட உடம்பு நிலைமை இப்பத்தான் கொஞ்சம் பரவாயில்லே நந்தகுமாரா... பிளட் பிரஷர் ஏறிடுச்சுன்னா.... இதுகூட கிடையாது. உப்பில்லாத கஞ்சி தான் குடிக்கணும்...''

டாக்டர், இன்பாவைப் பார்த்து அகலமாய்ச் சிரிக்கிறார்.

''இன்பவல்லி.... நல்ல பேரு. வெரி குட் பர்ஸனாலிடி. சர்க்கரைப் பொங்கல் போட்டுக்க. இந்த வீட்டுல மெதுவடை சாப்பிட்டவங்க, மறுபடி வேறே எங்கேயும் சாப்பிட மாட்டாங்க. நீ எத்தனை கிலோ இருக்கே?''

''நாப்பத்தியேழு.''

''உன்னோட உசரத்துக்கு இன்னும் அஞ்சு கிலோ தாராளமா ஏத்தலாம்... நந்தகுமாரா...''

''என்ன டாக்டர்....''

''எக்ஸர்சைஸ் பண்றியோ?''

''ஓ....''

''பார்த்தால் அப்படி தெரியலியே. லேசா தொப்பை போட்டிருக்கே. பீர் சாப்பிடறியோ....''

லோகநாதன் கவலையுடன் மகனைப் பார்க்க, அவன், இப்படித் தனக்கு வேண்டியவர்களின் எதிரே, அவமதிக்கும் டாக்டரை ஒரு விரோதப் பார்வை பார்க்கிறான்.

''சேச்சே!''

''அதெல்லாம் தப்பில்லேப்பா. களவும் கற்று மறன்னு பெரியவங்க சொல்லியிருக்காங்க. உங்க அப்பாவையே கேளு. அவருக்கு எல்லாக் கலையும் தெரியும். ஆனா, எதுவுமே தெரியாதவர் மாதிரி இருப்பாரு.''

இன்பா, அவரது பேச்சை ரசிக்கவில்லை. முதலாவது அந்த டாக்டரையே அவளுக்குப் பிடிக்கவில்லை.

இத்தனை பேசுகிறவர், ஆறு இட்லி, நாலு வடை, இரண்டு தடவை சர்க்கரைப் பொங்கல் என்று வெட்டி விட்டாரே, இது என்ன நியாயம்....

புவனாவை இவையெல்லாம் பாதித்ததாகத் தெரியவில்லை. வாத்தியாருக்கு அடங்கி நடக்கும் பள்ளி மாணவி போல இரண்டே இரண்டு இட்லியை, அதுவும் தொட்டுக் கொள்ளக் கூட எதுவும் கேட்காமல் சாப்பிட்டு முடிக்கிறாள்.

ஒருகணம், 'ச்சீ' என்றாகிறது இன்பாவிற்கு.

எத்தனை வசதிகள் இருந்துதான் என்ன... வயிறு நிறைய சாப்பிடக் கொடுத்து வைக்கவில்லையே....

அவர்கள் சாப்பிட்டு எழுந்ததுமே, டாக்டர் புவனாவை அவளது அறையில் கொண்டு விட்டு வருவதாகச் சொல்லிப் போகிறார்.

லோகநாதன், தனது வழக்கமான இடமான பெரிய கல்யாணக் கூடத்துக்கு வருகிறார்.

வரும் பொழுதே, இன்பாவிடம் சொல்கிறார்.

''புவனா — இப்ப இப்படி இருக்காளே தவிர, உன்னை மாதிரி சின்ன வயசுல துறுதுறுன்னு ரொம்ப அழகா இருப்பாம்மா.''

''இப்பக் கூட அவங்க அழகாத்தான் இருக்காங்க. துறுதுறுப்புதான் மைனஸ்.''

''பெத்த குழந்தைகளுக்கு இந்தக் கதி ஏற்பட்டதுலே அவளுக்குப் பெரிய ஷாக். நினைச்சா படுத்துடுவா. உலகத்துல இருக்கிற எல்லா வியாதிகளும் அவள்கிட்டே இருக்கு... அவ ரூம் முழுக்க மருந்துதான்....''

''என்னைக் கேட்டா அவங்களுக்குத் தாழ்வு மனப்பான்மையும், அதீத கற்பனையும் தான்னு சொல்லுவேன். பாருங்க, சாதாரணமாக அவங்க குளிச்சு, பூ வைச்சு, பொட்டு வச்சிட்டாலே அழகா இருப்பாங்க... தான் அழகாயில்லையோங்கற நினைப்பே அவங்களை ஓவரா மேக்கப் பண்ணிக்கச் சொல்லுது. அதே மாதிரிதான் இனிமேல் எதுக்குமே பிரயோசனமில்லையோங்கற பயமே, அவங்களைப் படுக்கப் போடுது.''

அவள் தயக்கமின்றிச் சொல்ல, லோகநாதன், முகமெல்லாம் விகசிக்க அவளையே பார்க்கிறார்.

'இவ, என் வீட்டுக்கு வசந்தமா வந்திருக்கா.'

இந்த நினைப்பு — அவரது நெஞ்சில் மறுபடியும் குரல் கொடுக்கிறது....

இன்பா, அந்தத் தூண்களைச் சுற்றி வருகிறாள்... தொண்டைக் குழிக்குள் இனம் தெரியாத துக்கம் அடைக்கிறது...

'யப்பா... எவ்வளோ பெரிய தூண்கள்.'

வழுவழுத்த தூணை ஸ்பரிசித்தபடியே திரும்பி நந்தகுமாரைப் பார்த்தவள் 'பட்'டெனச் சொல்கிறாள்.

''இந்த வெத்துத் தூண்களைப் பார்த்தா, என்னமோ மாதிரி இல்லே?''

''ஒரு மாதிரியும் இல்லையே...''

''நோ.... எனக்கென்னமோ மனுஷங்களை முழுங்கிட்டு நிக்கிற ராட்சஸன் மாதிரியிருக்கு.''

லோகநாதனின் புருவம் சுருங்குகிறது.

(தொடரும்)




# பிலிப்ஸ்

## பிலிப்ஸ் டிசைன் செய்துள்ளதென்றால் அதை ஒவ்வொரு அம்சத்திலும் காணலாம்.



**சீரான அமைப்பு, எழில்மிகு தோற்றம்**
சேர்த்திடும் கம்பீரமும் இணைந்த உறுதிமிக்க பிலிப்ஸ் மிக்ஸர்-கிரைண்டர், கச்சிதமானதும் உபயோகத்திற்கு எளிதானதும் ஆகும்.




**உபயோகத்திற்கு மிக எளிதானது**
இரண்டு ஜார்கள்—திரவ பதார்த்தங்களுக்கென ஒரு உறுதிமிக்க எளிதான பிளாஸ்டிக் ஜார்; அரைப்பதற்கென ஒரு ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் ஜார். ஒவ்வொன்றும் தனித்தனியாக இணைக்கப்பட்ட பிளேடுகளுடன்

**பல உபயோகங்கள்**
அரைத்தல், கலத்தல், நறுக்குதல், பிழிதல், ப்ளெண்டிங் மற்றும் விப்பிங் போன்ற வேலைகள் செய்ய 3-4 நிமிடங்களே தேவை. இதில் சக்திவாய்ந்த 450 வாட் மோட்டார் உள்ளது. மூன்று அடிப்படை சுழல் வேகங்களுக்கென ரோட்டரி ஸ்விட்ச் மற்றும் உங்களுக்குத் தேவைப்படும் சரியான சுழல் வேகத்தைப் பெற 'இஞ்சிங்' செளகரியம் கொண்டது.

அம்சத்துக்கு அம்சம் இது உயர்தரமானதாகும். தவிர, நாடெங்கும் பரவலாக விற்பனைக்குப் பின் பிலிப்ஸ் வழங்கும் ஸர்விஸ் வசதியின் பின்பலம் கொண்டது.

CLARION/B/P/168/203 TAM

# பிலிப்ஸ் மிக்ஸர்-கிரைண்டர்

**பிலிப்ஸ்–ஐம்பது ஆண்டுகளுக்கும் மேலாக இந்திய வீடுதோறும் விளங்கும் நம்பகமான பெயர்**

# சந்துருவுக்கு வந்தவள்!

அந்தக் கல்யாண ரிசப்ஷன் நன்றாகக் களைகட்டி விட்டிருந்தது. குடும்ப வழக்கம் என்று அவன் தனது கல்யாணத்தைத் திருப்பதியில் வைத்துக் கொண்டமையால் அவ்வளவு தொலைவு போய்த் தலையைக் காட்டி அட்சதையை அள்ளிப்போட்டுவிட்டு வர வழியில்லாத அவனது ஆபீஸ் ஊழியர்கள் 'ஜே,ஜே' என்று ஹால் முழுக்கத் திரண்டு வந்திருந்தார்கள்.

''பய நல்லாத்தான் செலக்ட் பண்ணியிருக்கான்...''

''போடா பேய்; இவன் உயரத்துக்குப் பொண்ணு ஆளும் குட்டை; இதைப் போய் நல்ல செலக்ஷன்கிறியே...?''

''எங்கடா கண்ணு உன் ஆளு? உன் பாறை மூஞ்சிக்கு உனக்கு வாச்சிருக்கறவ ரோஜாப் பூடா...''

ஆளாளுக்கு அபிப்பிராய ஊஞ்சலில் மிக்சரையும் காரா சேவையும் கொறித்துக் கொண்டு ஆடிக் கொண்டிருந்தார்கள். ஏறத்தாழ எல்லோருமே தம்பதி சமேதராய் வந்திருந்தனர். சந்துரு மட்டும் விதி விலக்காய்ச் சாமை வயலின் தனிக் கதிர் போல ஓரம் கட்டி ஒதுங்கியிருந்தான்.

எங்கே யாராவது வந்து, 'உன் மனைவியை ஏண்டா அழைச்சுக்கிட்டு வரலே?' — என்று கேட்டுவிடுவார்களோ என்னும் தயக்கத்தில் முகமே இலேசாய் வெளிறி விட்டிருந்தது.

'குப்'பென்று பரவிய அந்தச் சோகத்தில் இதயம் ஏழெட்டு மடங்கு திடீரென்று பெரிதாக வளர்ந்து மார்புப்புறம் கனப்பது போல்பிரமைதட்டியதுசந்துருவுக்கு. மௌனமாய் நண்பர்களிடையே சிரித்து மழுங்கலாய் ஒப்பேற்றிவிட்டு வீடு திரும்பும் போது அழுகை வரட்டுமா என்று கேட்டது.

அப்படியே அந்த அழுகை ரிவர்சில் திரும்பி வனஜா பக்கம் பாய்ந்தது.

'உனக்கு மட்டும் ஒரு கால் ஊனமில்லாமல் இருந்திருந்தால் எனக்கு இன்று இப்படி ஒரு கறுப்பி பெண்டாட்டியாயிருப்பாளா? எல்லாம் என் விதி...'

நினைப்போடு குமுறிக் கொண்டே வீட்டுப்படி ஏறியவனைக் காத்திருந்த தோரணை கலையாமல் வரவேற்றாள் பார்வதி. ஓடிப் போய்க் காப்பி எடுத்து வந்து நீட்டினாள். ஷூவை அவிழ்க்கட்டுமா என்பது போல் பாவனை காட்டினாள். அவன் எதையும் லட்சியம் செய்யவில்லை. அவள் நீட்டிய காப்பியைக் கைகளால் கூடத் தொடவில்லை.

ஷூக்களைத் தானே கழற்றி எறிந்து விட்டு மளமளவென்று தனது அறைக்குள்ளே நுழைந்து கதவைத் தாழ் போட்டுக் கொண்டான். அதைப் பார்த்த ராகவனுக்கும் லட்சுமிக்கும் வழக்கம்போல் உதைப்பெடுத்தது. அவர்கள் வாட்டத்தோடு பார்வதியைப் பார்த்தபோது அவள் கதி கலங்கியவளாய் வெறித்து விட்டிருந்தாள்.

இருவருக்கும் கல்யாணமாகி ஆறு மாதத்திற்கும் மேல் ஆகிவிட்டது. சந்துருவின் ஸ்பரிசம் இன்னும் அவள்மேல் படவேயில்லை என்னும் அந்த முக்கியமான விஷயம் முதல், நாளது வரை, அவளை அவன் ஏறெடுத்துப் பார்த்து, 'இதுதான் அன்பு' எனும்படியாக ஒரு வார்த்தை கூடப் பேசியிராத கொடுமை அந்த வெறிப்பில் 'கொடி கட்டிப் பறந்து கொண்டிருந்தது.

லட்சுமி அப்படியே நொறுங்கிப் போய் நின்றபோது 'லொக், லொக்' என்று அவனது பழைய 'டி. பி.' யை ஞாபகப் படுத்திக் கொண்டு வந்த இருமல் நிற்காமல் தொடர்ந்தது. ராகவன் அதைக் கேட்கச் சகியாதவராட்டம் காதைப் பொத்திக் கொண்டு கொஞ்சம் தள்ளி அமர்ந்து கொண்டார்.

''ஒரேயடியா இருமாதே சனியனே...

இந்திரா சௌந்தர்ராஜன்



செத்து ஒழி!'' — கத்தினார். இந்தச் சப்தம் சந்துருவுக்கும் கேட்டிருக்க வேண்டும். அறைக் கதவைத் திறந்து கொண்டு ஆச்சரியத்துடன் எட்டிப் பார்த்தான். ஒரு பக்கம் மனைவி பார்வதியின் வதங்கிய முகம் என்றால் அதோடு 'போட்டிக்கு நின்றது லட்சுமியின் முகம். ஊடே அது இடைவிடாமல் இருமித் தள்ளியது.

ராகவனின் சிரம் நிமிர்ந்து லட்சுமியைப் பார்த்தது.

''வரவர இந்த வீட்டுல நிம்மதியே இல்லாமப் போயிடிச்சு...'' — புலம்பிக் கொண்டே எழுந்து வெளியே நடக்க ஆரம்பித்தார்.

இடைத் தெருவில் கறிகாய் வாங்கிக் கொண்டிருந்தாள் வனஜா. அவளை அங்கே எதிர்பாராத விதமாகப் பார்த்த ராகவனுக்குள் மகிழ்ச்சி. ஆச்சரியம் இரண்டுமே வந்து மோதியது. மகளிடம் வாஞ்சையுடன் நெருங்கினார்.

''என்னம்மா வனஜா, உனக்கெதுக்கு இந்த வேலையெல்லாம்?''

நிஜமாலுமே கரிசனத்துடன் கேள்வி வேறு. வனஜாவுக்குக் கேள்வியோடு அப்பாவைப் பார்க்கக் கொஞ்சம் பரவசமாய் இருந்தது.

''வாங்கப்பா... அவரும் வந்துருக்காரு'' — என்றபொழுதுதான் வனஜாவுடன் மாப்பிள்ளையும் வந்திருப்பது தெரிந்தது. வந்த மாப்பிள்ளை ஸ்கூட்டருடன் சற்றுத் தள்ளி ஒரு நண்பனுடன் பேசிக் கொண்டிருப்பதைப் பார்த்துவிட்டு மாறாத கரிசனத்துடன் வனஜாவைப் பார்த்தார்.

''அவர் என்னை நடக்கவே விடறதில்லே. நான்தான் அவரை ஏமாத்திட்டு இப்படி எல்லாம் நடந்துக்கறேன். ஒரு நொண்டியைக் கட்டிக்கிட்டதால எவ்வளவு சிரமம் பாருன்னு அவர் நினைச்சுடக் கூடாது பாருங்க...?''

அந்தக் கேள்வியின் நியாயம் ராகவனுக்குள் பரவிய போது மாப்பிள்ளை மோகன் நண்பனிடம் விடைபெற்றுக் கொண்டு ராகவனை நெருங்கியிருந்தான்.

''வாங்க மாமா...'' — என்று பணிவாய் வரவேற்றான். மிதப்பாய் நிமிர்ந்த ராகவனை அவனுடைய அடுத்த கேள்வி இடித்தது. ''பார்வதி நல்லா இருக்காளா மாமா? விசேஷம் ஏதாவது உண்டா?''.

மழுப்பலாய்ச் சிரித்து அந்தக் கேள்விக்குப் பொய்யாய் எதை எதையோ சொல்லிச் சமாளித்தார் ராகவன்.

''வீட்டுக்கு வந்துட்டுப் போங்க...'' இது மாப்பிள்ளை மோகன்.



''உன்னூர்தானே மாப்பிள்ளை.'' நீங்க போங்க சாவகாசமா வரேன்...'' — இது ராகவன்.

அவர்கள் போய்விட்டார்கள், ஒரு குறையு மில்லாத சந்தோஷமான தம்பதிகளாக. விதிவசத்தால் உடம்பில் ஊனமிருந்தும் உள்ளத்தில் அது இல்லாததால் புயல் வந்தால் கூட அது தென்றலாய் உருமாறி வீசும் பாங்கில் அவர்களைப் பார்க்க நன்றாகத்தான் இருக்கிறது.

ஆனால் பார்வதி?

நினைக்கவே நெஞ்சு கனத்துப் போனது ராகவனுக்கு. முள்மேல் நிற்கிற மாதிரியும், சாட்சிக் கூண்டில் குற்றவாளியாகக் கைகட்டி நிற்கிற மாதிரியும் மனக்கண் தோற்றங்கள் மத்தாப்புக் கொளுத்திப் போட்டன.

வாஸ்தவத்தில் பார்வதியின் வீட்டு வாசலில் கைகட்டிப் போய் நின்றது முதலில் ராகவன்தான். ஒரு கால் ஊனமான பெண் என்பதால் 'கல்யாணம்' என்பது வனஜாவின் வாழ்க்கையில் இல்லாமலே போய்விடுமோ என்னும்படியான சூழ்நிலையில் மோகன் அப்பொழுது (இப்பொழுதும்) ஒரு விளக்காய்த்தான் தெரிந்தான்.

தனக்கு வனஜாவைத் திருமணம் செய்து கொள்வதில் ஆட்சேபணையில்லை, ஆனால்... என்று தன் தங்கை பார்வதியைக் காட்டிய போதுதான் கொஞ்சம் தடுமாறியது ராகவனின் நெஞ்சம்.

''என் தங்கையும் உங்க பெண் மாதிரிதான். இயற்கையால் சபிக்கப்பட்டவ. இவளுக்கு ஒரு நல்ல வாழ்க்கை அமைச்சுக் கொடுத்த பிறகுதான் என் கல்யாணம். அது வரைக்கும் பொறுக்க முடியுமா?'' — என்று கேட்டான்.

'எந்தவிதமான நிர்ப்பந்தமும் இல்லாமல், எதிர்பார்ப்பும் இல்லாமல் தன் ஊனமான பெண்ணைக் கட்டிக் கொள்ள ஒரு ஆண் பிள்ளை தயாராய் இருக்கும்பொழுது அவன் தாப்பு ஊனத்துக்கு ஒரு வழி காட்ட நமக்குத்தான் வக்கில்லையா?' — ராகவன் கேள்வியோடு நெகிழ்ந்து போய் வீடு திரும்பிச் சந்துருவை இடித்தார்.

''நீ அந்தப் பெண்ணைக் கட்டிக்கத்தான் வேணும்'' — நிர்ப்பந்தித்தார். கல்யாண விஷயத்தில் ஈஸ்ட்மென் கலர் கனவுகளில் ரீல் ரீலாய் நீந்திக் கொண்டிருந்தவனுக்குத் தூக்கி வாரிப் போட்டது.

''உன்கிட்ட சீர் கேட்கலே, செலவுக்குப் பணம் கேட்கலே. விசாலமான மனசைக் கேட்கறேன். அதுவும் உன் சகோதரிக்காக! அவளுக்குவாழ்க்கைகொடுக்கஒருநல்லவன் தயாராயிருக்கான். அவனுக்கு நன்றி காட்ட வேண்டியதுநம்மகடமைமட்டுமல்ல.கட்டாயமும் கூட.

ஒரு பெண் கல்யாணமாகாமே இருந்தா எவ்வளவு ஏச்சுப் பேச்சு, மனவருத்தம், கஷ்டம்கறதெல்லாம் உன் தங்கையால நாம அணு அணுவா அனுபவிச்சிருக்கோம். இந்தக் கஷ்டம் இன்னொருத்தர் படவிடலாமா? உன் எதிர்பார்ப்பைக் கொஞ்சம் தியாகம் செய்; எல்லாருக்கும் நல்லது. சரீர சம்பந்தமான எதிர்பார்ப்புகளுக்கு ஆயுள் ரொம்பக் கம்மி சந்துரு. கடைசி வரையிலும் ஒன்றி வாழப் போறது மனசும் அது காட்டற அன்பும்தான்... ப்ளீஸ்...''

கடைசியில் பார்வதிக்குச் சந்துருவைக் கொடுத்துப், வனஜாவுக்கு மோகனைக் கொடுத்தும் இருதாரப்புச் சிக்கல் முடிச்சும் அவிழ்க்கப்பட்டு மனிதாபிமானக் கொடி உயரப் பறந்தது. ஆனால் அது தன் வீட்டில் மட்டும் அரைக் கம்பத்தில் பறக்கும் கொடுமைக்கு எங்கு போய் முட்டிக் கொள்ள?

மோகனும், அவன் தாய் தந்தையரும் கேட்கும்போதெல்லாம் எவ்வளவுதான் பொய் சொல்லுவது? அந்தப் பெண்ணுக்கும் உயர்ந்த மனம்.

நாளது வரையில் ஒரு குற்றம் குறையைக் கூடத் தன் வீட்டாரிடம் கூறி அவள் புலம்பவேயில்லையே...!

**வீ**டே திகைத்துப் போயிருந்தது. கிட்டத்தட்டப் பதினைந்து நாட்களாய் ராகவனும் லட்சுமியும் 'வள், வள்' என்று எரிந்து விழுந்ததன் எதிரொலிக்கு அன்று ஒரு முடிவு ஏற்படும் போல் தோன்றியது.

நடுக்கூடத்தில் சந்துருவையும், லட்சுமியையும் இழுத்து வைத்து நிறுத்திக் கொண்டு, தனக்குப் பக்கத்தில் பால்ய சினேகிதர் அருணாசலத்தையும் அமர்த்திக் கொண்டு தீர்க்கமாய்ப் பேசத் தொடங்கினார் ராகவன்.

''இதோ பாருங்க, நான் தீர்மானமாச் சொல்லிடறேன். எனக்கு என் மனைவியைப் பிடிக்கலே. சதா லொக்கு, லொக்குன்னு இருமிக்கிட்டு டி. பி. வியாதியோட அவளைப் பார்த்தாலே எனக்குப் பத்திக்கிட்டு வருது. பத்தாததுக்கு முடியெல்லாம் கொட்டிப் போய்ப் பார்க்கச் சகிக்கலே. அதனாலே நான் அவளைவிட்டு ஒதுங்கி என் விருப்பத்துக்கு வாழ முடிவு பண்ணிட்டேன்...

— அவர் சொல்லும் பொழுதே அதைக் கேட்கச் சகிக்காமல் லட்சுமி வாய்விட்டு வெடித்துவிட்டாள். ஸ்னேகிதர் அருணாசலத்துக்கே அதைக் கேட்கப் பற்றிக் கொண்டு வந்தது.

''என்னடா ராகவா இது, ஒரு பேரன் பேத்தி எடுக்கப் போற வயசுல இப்படியெல்





லாம் பேசிக்கிட்டு. உன் பெண்டாட்டி எங்கடா போவா?'' என்று கேட்டார்.

பட்டென்று பதில் பிறந்தது ராகவனிடம்.

''என் இவன் எதுக்கு இருக்கான்?'' — என்று சந்துருவைப் பார்த்துக் கைகாட்டினார்.

''என்னாலை அவங்க வயித்தைத்தான் நிரப்ப முடியும். மனசை நிரப்ப முடியுமா? இவ்வளவு நாள் இல்லாம உங்க புத்தி இந்த வயசுல ஏன் இப்படிப் போவுது?'' — சந்துரு அம்மாவுக்கு வக்காலத்தாக முதல் முறையாகச் சீறி விழுந்தான்.

''எனக்குப் பிடிக்கலே. பிடிக்கலேன்னு அதுக்கு இதுதான் வழி. இருந்து கசந்து வழியக் கூடாது. நாகரிகமா ஒதுங்கிக்க றேன். தப்பா?'' — ராகவன்.

''ஊர் சிரிக்கும்!'' — சந்துரு.

''உன்னை நாங்க பார்த்துச் சிரிக்கிறதை விடக் கம்மியாத்தான் சிரிக்கும். உன் மனைவி அழகா இல்லேன்னு அவளை நீ ஒதுக்கி வைக்கலாம். என் மனைவி நோயாளின்னு நான் ஒதுங்கக் கூடாதோ?'' — ராகவனின் கேள்வியின் கனத்தில் சந்துருவின் தலை அப்படியே கவிழ்ந்து போனது.

''நீ செய்யறது உனக்குச் சரின்னா நான் செய்யறதும் சரிதான்.'' — ராகவன் மேலும் பேசினார்.

''எனக்கு நடந்தது எனக்குப் பிரியமில் லாத கல்யாணம். உங்களுடையது அப்படி அல்ல. அதனால் நீங்க இப்படிச் செஞ்சா அது அம்மாவுக்குச் செய்யற துரோகம்.'' என்றான் சந்துரு.

— அது வரையில் பேசாமல் இருந்த பார்வதி இப்பொழுது அவர்களுக்குள்ளே நுழைந்தாள்.

''மாமா, எதுக்கு இந்தக் கூத்தும் நாடக மும்? மனவிருப்பங்கள் இயல்பாய் இயற்கை யாய் ஏற்படணும். செயற்கையாய் உண் டாகக் கூடாது. உங்களைத் திருப்திப்படுத்த அவர் என் பேர்ல செயற்கையா அன்பு செலுத்தறதை நானே வெறுக்கிறேன்!''

''அவர், அவர் விருப்பத்துக்கு நல்ல அழ கான பெண்ணைப் பார்த்துக் கல்யாணம் பண்ணிச் சந்தோஷமா இருக்கணும். அது தான் எனக்கு வேணும்! நீங்க அத்தையை வதைக்காதீங்க. அத்தையோட மனசு வெள்ளை. அந்த நிறத்தைப் பார்த்துட்ட உங்க ளுக்கு எந்த நிறம் எப்படி இருந்தா என்ன? நான் சொல்லியா உங்களுக்கு இதெல்லாம் தெரியணும்?''

— நீளமாகப் பேசினாலும் அதுதான் எத்தனை செறிவான பேச்சு. ராகவனும் லட்சுமியும் விக்கித்து நிற்க, 'சபாஷ்' என் பது போல் அருணாசலம் கைதட்டி மகிழ்ந் தார்.

ஏனோ தலைமீது ஒரு மிகப் பெரிய பாரம் கவிழ்ந்த மாதிரியில், நிமிர முடியாத சிரத் துடன் ஒரு குற்றவாளியாகத் தன்னை முதன் முறையாகப் பாவித்துக் கொண்டு, சற்றுப் பரவசமாக ஓரக்கண்ணால் பார்வதியைப் பார்த்தான் சந்துரு!

# தஞ்சை மாவட்ட சிப்ஸ்

* தஞ்சாவூருக்கே உரிய பச்சை; ஊடே வளைய வளைய ஓடும் 'சின்னப் பெண்'ணான காவிரி; அந்த மண்ணுக்கே உரிய சங்கீத ரசனை. அந்தத் தஞ்சாவூர் மாவட்டத்தை ஒரு சுற்றுச் சுற்றினோம்.

* காலையில் அநேக கோவில்கள் சுப்ர பாதத்தோடு விழிக்கின்றன. எந்த ஊரிலும் ஏதாவது ஒரு சந்தின் முனையில் கர்நாடக சங்கீதம், சர்வ சாதாரணமாய்க் கேட்டுக் கொண்டிருக்கிறது. திருவாரூரிலுள்ள பஸ் ஸ்டாண்ட் பக்கத்தில் அதிகாலையிலேயே ஒரு குரல். என்ன குரல்? "வை.... ராஜா... வை" என்று மூணு சீட்டைத்தான் ஒருவர் அந்தக் குழப்புப் குழப்பிக் கொண்டிருந்தார். 'ராஜா' என்று அநேகரையும் ஏக அன்பாய்க் கூப்பிட அதிகாலையிலேயே சில 'ராஜா'க் கள் தடுமாறிக் கொண்டிருந்தார்கள். நாமும் 'ஒரு ராஜா' வாய்ப் பக்கத்தில் போய் நிற்க, மனுஷர் முகத்தில்தான் என்ன பெருமிதம்? 'என்ன தொழில் பற்று? காலையில் குளித்துக் குடுகுடுவென்று கோவிலைத் திறக்க வருகிற மாதிரி, அந்தக் காலை வேளையிலும் என்ன கடமை உணர்ச்சி!

* திருவாரூர் லேசுப்பட்ட ஊரா? மனு நீதிச் சோழன் மூச்சு வளைய வந்த ஊராச்சே! சும்மா இருப்பார்களா நம்மாட்கள்? ஒரு ஞாபகச் சின்னம் கட்டி வைத்திருக்கிறார்கள் திருவாரூர்கோவிலையொட்டி.நாமும்போனோம். இருபத்தைந்து பைசா டிக்கெட். மனுநீதிச் சோழனை டெண்டர் விட்டிருந்தார்கள். நாம் போனபோது, ஒருவர் காலை மேலே தூக்கிய படி படுத்தவாறே அலட்சியமாக டிக்கெட் கொடுத்தார்.

தேர்க் காலடியில் மகன் நசுங்கிக் கிடக்கச் சோழன் சாட்டையை எடுக்கிற காட்சி. சாட்டையைப் பிடுங்கி எறிந்திருந்தார்கள். ம.நீ.சோழனின் முதுகே 'பெண்டா'கி இருக்க சிமெண்ட்டால் ஒட்டுப் போட்டு லேசாய் ஒருநிமிறல்நிமிர்த்தியிருந்தார்கள்.சோழனே இப்படி என்கிறபோது, குதிரைகள் வாலு மில்லாமல் காது வரைக்கும் சிமெண்டு ஒட்டு கள். பேசாமல் இந்த மண்டப வாசலில் ஒரு மணியைத் தொங்கவிட்டால் போதும்.







இரவு நேரம் பார்த்து ம.தீ. சோழன் ஆவியும், தன் குட்டி மகன் ஆவியுடன் கைகோத்தபடி வந்து தேம்பித் தேம்பி அழுதபடி 'நீதி கேட்டு' மணியடிக்கக் கூடும்!

* வேளாங்கண்ணி எவ்வளவு பெரிய திருத்தலம்! நிறைய பக்தர்கள்; வடக்கிலிருந்து பலர் வந்திருந்தார்கள். இவ்வளவு இருந்தும் தங்குவதற்குப் போதுமான லாட்ஜ்கள் இல்லை. ஒரு லாட்ஜில் நுழைந்து பார்த்தோம். என்ன மோசமான வசதி! ஜெயிலைவிட மிக மோசமான படுக்கைகள். பலரும் இதில்தான் வந்து தங்கிப் போகிறார்கள். மொட்டையடித்த ஒருவர் வந்து புலம்பாத குறையாகச் சொன்னார்: ''தினமும் ஒரு 'ரேட்' சார் இங்கே. வெள்ளிக் கிழமை ரூம் வாடகை வேறே; சனிக்கிழமை வேற 'ரேட்'. வர்றவங்க எங்கே சொல்றதுன்னே தெரியலே'' என்றார். பக்தர்கள் வருகிறஇடம் இப்படியா இருக்கும்?

* நாகப்பட்டினம். பஸ் ஸ்டாண்டை ஒட்டி ஒரு கட்டணக் கழிப்பறை. பக்கத்தில் நாகூரும், வேளாங்கண்ணியும் இருப்பதால் அவ்வளவு யாத்ரீகர்கள்! கழிப்பறையில் அறைகள் கம்மி என்பதால் முன்னால் இருந்த 'க்யூ'க்காரர்கள், முகத்தை அப்படியொரு கஷ்டமாக வைத்துக் கொண்டு அந்த நெளி நெளிந்துகொண்டிருந்தார்கள். எவ்வளவோ தொலைவில் இருந்து வருகிறவர்களை இப்படியா சோதிப்பது?

* நாகையில் கடலோரமாக இருக்கிற 'பூங்கா.' கொடி மரத்து மேடை என்கிறார்கள். டச்சுக்காரர்கள் உபயோகித்திருக்கிறார்கள். 1660லிருந்தே இருக்கிறது இந்தப் பூங்கா. சரித்திரத்தோடு சம்பந்தப்பட்ட இந்தப் பூங்கா வெகு அனாதையாய்க் கிடக்கிறது. அபூர்வமாகப் புல் தெரிகிறது. கஞ்சாக்காரர்கள் உபயோகப்படுத்தும் இடமாகிப் போய்விட்டது என்கிறார்கள். சரித்திரத்தோடு நெருங்கின இடத்தில் சாய்மானமாக உட்கார்ந்து 'ஓர் இழுப்பு இழுத்தால்' மனோகர் டிராமாவில் வருகிற மாதிரி ஏதாவது ஆசாமிகள் கற்பனையில் தெரிகிறார்களோ.... என்னவோ?

* நாகைக்குப் பக்கத்தில் ஒரு கிராமம், நரிமணம். இப்போது இங்கு 'குரூட் ஆயில்' கிடைக்க ஆரம்பித்துவிட்டது. ஆனால் சுத்திகரிப்புக்கு ஓர் ஆலை பக்கத்தில் இருந்தால் தேவலையே என்று அவ்வளவு வருத்தப்படுகிறார்கள் நாகைக்காரர்கள். நரிமுகத்தில் விழுந்த 'அதிர்ஷ்டம்' மாதிரி 'நரிமணம்' என்ற பெயர் வைத்த ராசி போலிருக்கிறது.

* தஞ்சை மாவட்டத்தில் எந்த பஸ்ஸில் ஏறினாலும் 'டேப்பில்' ராஜேந்தரின் மைதிலிதான். டேப்புகளை 'செமை அடி அடிக்கிறார்கள். ராஜேந்தர் பற்றி (மாயவரக்காரரில்லையா?) அவ்வளவு மரியாதையாகப் பேசுகிறார்கள். மைதிலி போடப்பட்டிருந்த தியேட்டர் முன்னால் ரசிகர் மன்றங்கள் தொங்க விட்டிருந்த போட்டோக்களைப் பார்த்தோம். முரட்டுமுரட்டுத்தமிழ்ப்பட்டங்கள். எவ்வளவு பட்டங்கள்? பழங்கால மன்னராசாமிகளே பொறாமைப் பட்டாலும் படலாம்!

* ஒரத்த நாடு பக்கத்திலுள்ள மெயின் ரோட்டில் நிற்கிறார் 'அண்ணா'. வழக்கமாக எப்படி நிற்பார்? ஒரு கை உயர்த்தித்தானே? இங்கே கையே இல்லை. தனியாக யாரோ கழற்றியது மாதிரி அல்லது கையைத் தூக்கிக் கொண்டு இருந்ததால், 'வலிக்குதுப்பா ச்சே' என்று அண்ணாவே கழற்றி எறிந்த மாதிரி இருக்கிறது சிலை. அண்ணாவுக்குத் தி.மு.க. மாலை போட்டால் அ.தி.மு.க. போட்டி போட்டு மாலை போடும். அ.தி.மு.க. விழா எடுத்தால் தி.மு.க.வும் விழா வெடுக்கும். ஒரு கையை எடுத்தது எந்தக் கட்சியோ தெரியவில்லை. பதிலுக்கு வழக்கமான போட்டி வந்துவிட்டால்?

* சில மாவட்டங்களில் 'இரண்டுக்கு மேல் வேண்டாம்' என்கிற கு.க. பிரசாரம் இருக்கத் தஞ்சை ஜில்லா முழுக்க 'ஒன்றுக்கு மேல் வேண்டாம்' என்கிற போர்டுகளுடன் பஸ்கள் அலைகின்றன. ஏக சிக்கனமாக இருக்க முடிவெடுத்துவிட்டார்கள் போலிருக்கிறது. இனி 'ஒன்றுமே வேண்டாம்' என்று படு சிக்கனமாகிவிட்டாலும் விடுவார்கள் போலும்!

* தஞ்சைப் பெரிய கோவிலுக்குள் நுழைகிற இடத்தில், நெளிந்து நெளிந்து கொடுத்தபடி காலையிலிருந்து பிச்சை எடுக்கிறது கோயில் யானை. போகிறவர்கள் ஓரமாக நின்று வாயை ஒரு பொத்துப் பொத்திப் பயத்துடன் ஒற்றை விரலை நீட்டி முரட்டுத் தோலைத் தொட்டுக் கும்பிட்டுக் கொள்கிறார்கள். பிச்சைகளில்கூட பலரகம்தானா? என்னவொரு பிரும்மாண்டமான பிச்சை?

* தஞ்சைக் கோவிலைச் சுற்றி உடனடியாக 'பாத்ரூம்' கட்ட முயற்சி எடுத்தால் நல்லது. தஞ்சைக் கோவிலைச் சுற்றின அகழியோரம் முழுக்க நேரங் காலம் பார்க்காமல் அசிங்கப்படுத்துகிறார்கள். அதிலும் நம் கேமராவைக் கண்டபோது பலரும் எழுந்து ஓடாத குறை!

* தஞ்சைப் பெரிய கோவிலை ஒட்டியே ஒரு பூங்கா. 'டெண்டர்' விடப்பட்ட பூங்கா தான். மரம், செடி, கொடிகளே சரியாகப் பராமரிப்பில்லாமல் கிடக்கும்போது, மிருகங்களை வேறு வளர்க்கிறார்கள். மிருகங்களுக்குத் தீனி அவ்வளவாகப் போடப்படாததைப் பலரும் குறையாகச் சொன்னார்கள். நிலைமையும் அப்படித்தானிருக்கிறது. முள்ளம் பன்றியிலிருந்து எல்லா மிருகங்களும் அப்படியொரு களைப்புடன் திரிந்தன. மான்களை வெட்ட வெளியில் அடைத்திருந்தார்கள். தண்ணீருக்குத் துளாவினபடி அவை மனுஷர்களைப் பார்க்கிற பார்வை பரிதாபம்! பூங்காவே சில இடங்களில் கிடங்கு மாதிரி இருக்கிறது. சில இடங்களில் 'ஒரு மாதிரி'க் காரியங்கள் சர்வ சகஜம் என்றார்கள் படித்துக் கொண்டிருந்த பையன்கள்.

**— யூகி.**

படங்கள்: **மனோ; பானுமணாளன்.**

காலத்தால் அழியாத
காவியம் படைக்கும்
சில நேரங்கள்.



கடியாரங்கள்

ஹேண்ட்வௌண்ட் ● ஆட்டோமேடிக்
குவார்ட்ஸ்

நாட்டிற்கு நல்ல நேரம் காட்டுவோர்



# உலக அமைதியும்; வீட்டிலே அமைதியும்!

வாசகர் பங்கு








## அமைதிக்கு உத்தரவாதம்

குழந்தைகளுடன் மனத்தாங்கல் ஏற்படும் போது கடும் மௌனம் சாதிப்பது; பெற்றோர்கள் குழந்தைகள் காதுபட அவர்களுடைய குறைகளைப் பற்றி வருத்தத்துடன் புலம்பி, ஒருவருக்கொருவர் ஆறுதல் சொல்லிக் கொள்வது; பெரியவர்களுக்கிடையே மனஸ்தாபம் ஏற்படுமானால் நம் பிறந்த வீட்டின் மேல் நமக்கு இருக்கும் அதே அளவு பாசம் அடுத்தவருக்கும் இருக்க நியாயமுண்டு என்று அறிவது; பண விஷயத்தில் ஒளிவு மறைவே இல்லாமல் இருப்பது.... இவை நிச்சயம் வீட்டில் அமைதி காக்க உதவுகின்றன.

— பூமா சுப்ரமணியன், கல்கத்தா.

## புதுமையான பரிகாரம்!

எங்கள் வீட்டைப் பொறுத்தவரை யாராவது கோபித்துக் கொண்டாலோ, கத்தினாலோ வீட்டு வாசலில் உள்ள பிள்ளையார் கோவிலில் பத்து தோப்புக் கரணம் போட வேண்டும் என்பது விதி! மேலும் 'புத்தம் சரணம் கச்சாமி' என்று ஐம்பது முறை எழுதவும் வேண்டும்! இல்லத்தில் அமைதிக்குக் கேட்கவா வேண்டும்?

— திருமதி சுதர்சனவல்லி, புதுச்சேரி—3.

## சினிமாவின் மகிமை

குழப்பம் மிக்க சூழ்நிலையில் 'உர்'ரென்று இருக்கும் குடும்பத்தினர் கவனத்தைத் திசை திருப்பத் தின்பண்டங்கள், தங்கைகளுக்குத் தேவையான சிறு பரிசுப் பொருட்கள் என்று வாங்கித் தருவேன். ஓரளவுக்கு இறுக்கம் தளரும். அவர்களாகப் பிரச்னையை ஆரம்பிப்பதற்கு முன் சமீபத்தில் பார்த்த சினிமாவின் சுவாரஸ்யமான 'ஜோக்'கை 'மோனோ ஆக்டிங்' செய்து காட்டினால் போதும். 'கொல்'லென்று சிரித்து விடுவார்கள்! பிறகு அமைதிதான்.

— கே. எம். செல்வராஜ், கடலூர்.

## பேச்சு குறைந்தால் போதும்

என் மனைவிக்கும் பெண்ணுக்கும் ஹிந்தி கற்றுக் கொடுத்து வருகிறேன். வீட்டில் ஹிந்தியில்தான் பேச வேண்டும் என்பது விதி. இதனால் தெரிந்த சில வார்த்தைகளை மட்டுமே உபயோகித்து மிகக் குறைவாகத் தான் பேச முடிகிறது. பேச்சு குறைகிறது. அமைதி நிறைகிறது!

— எஸ். நாகசுந்தரம், திருவாடானை.

## நகைச்சுவை உணர்வுக்கு நன்றி!

எனது நகைச்சுவை உணர்வுதான் எங்கள் வீட்டில் அமைதி காக்க உதவுகிறது. ஒருமுறை மனைவியின் உறவினர்களை வழியனுப்ப ஸ்டேஷனுக்குப் போகாமல் ஆபீஸ் நண்பர்களுடன் சினிமாவுக்குப் போய்விட்டேன். 'என் உறவினர்கள் யாரையுமே உங்களுக்குப் பிடிப்பதில்லை' என்று மனைவி சாட ஆரம்பித்தாள். நான் விடவில்லை. 'ஏன் பிடிக்காது...? உன் மாமியார், மாமனார், நாத்தனார் போன்ற




உறவினர்களை எனக்கு ரொம்பப் பிடிக்குமே!' என்றேன். நான் சிரிக்க, அவளும் சிரிக்க... அப்புறம் ஏது கோபம்!

— எஸ். சங்கரசுப்பு, திருச்செந்தூர்.

## பாடிவிடுவேன்! ஜாக்கிரதை!

குழந்தைகள் இருவருக்கும் இடையே அவ்வப்போது கிளம்பும் சண்டையைச் சமாளிக்க அவர்களுக்குப் பரிசுகள் தருவதாகக் கூறிப் படிப்பில் கவனத்தைத் திசை திருப்புவேன். தம்பி தங்கைகளை அமைதிப்படுத்த வேண்டுமானால், 'இப்போது நீங்கள் சும்மா இருக்கிறீர்களா அல்லது நான் பாட ஆரம்பிக்கட்டுமா?' என்பேன். பெட்டிப் பாம்பாக அடங்கிவிடுவார்கள். என் குரலைக் கண்டு அவ்வளவு நடுக்கம்.

— என். உமா தேவி, கோவை—37.

## பிரஷர் குக்கர் மாதிரி...

என் கணவர் பிரஷர் குக்கர் மாதிரி!




ஆபீஸிலிருந்து வரும்போது கொதிப்போடு சீறிக் கொண்டு வருவார். பிரஷர் குக்கரின் வால்வை அவசரப்பட்டுத் திறந்தால்தானே ஆபத்து.... நானும் அவர் வம்புக்குப் போகாமல், பேசாமல் பூஜையறையில் போய் உட்கார்ந்து தியானம் பண்ண ஆரம்பித்து விடுவேன். குக்கரில் ஆவி தானாக அடங்கி அழகாகத் திறக்க வரும். அது மாதிரி அவரும் கோபம் தணிந்து சமாதானமாகிவிடுவார். எனது இந்தப் பொறுமைக் கொள்கை கடந்த இருபது ஆண்டுகளாக வீட்டில் அமைதி காக்க உதவி வருகிறது.

— எஸ். விசாலாட்சி, சென்னை—15.

## 'காஸ்ட்லி'யான கோபம்!

என் கணவருக்கு 'முனுக்'கென்றால் கோபம் வந்துவிடும். ஆனால் அந்தக் கோபத்தின் ஆயுள் வெகு சில நிமிடங்கள்தான். இந்தப் பலவீனத்தைப் பயன்படுத்திக் கொண்டு அவர் ஒவ்வொரு முறை கோபித்துக் கொண்டு, பிறகு வருத்தப்படும்போதும் ஐந்து ரூபாய் அபராதம் செலுத்தச் செய்தேன். அப்படிச் சேர்த்த தொகையைக் கொண்டு அவருக்கு அழகான பிறந்த நாள் பரிசு வாங்கித் தந்தேன். மனம் மாறிப் போய், கோபப்படுவது வெகுவாகக் குறைந்து போயிற்று.

— எல். வத்சலா, கும்பகோணம்.

## வடிகால் வேண்டாமா?

நாள் முழுவதும் உழைத்துவிட்டு வரும் கணவன்மார்களின் சோர்வுக்கும் கோபத்துக்கும் ஒரு வடிகால் வேண்டாமா....? அதனால்தான் என் கணவர் என் மீது கோபத்தைக் காட்டினாலும் பொறுத்துக் கொண்டு பேசாமல் இருந்து விடுவேன். கல்லூரி ஆசிரியராகப் பணியாற்றும் அவருக்குக் கோபம் என்றால் அன்று மாணவிகள் சரியாக நடந்து கொள்ளவில்லை என்று எனக்குப் புரிந்து போகும். அந்தச் சமயம் பார்த்து

எங்கள் குழந்தைகள் அப்பாவிடம் பாடத்தில் சந்தேகம் கேட்கப் போனால் அவருக்குக் கோபம் அதிகமாகிவிடும். 'நான் வெளியிலும் கத்த வேண்டும்; வீட்டிலும் கத்த வேண்டும்!' என்று எரிந்து விழுவார். அதனால் கூடியவரையில் நானே குழந்தைகளுக்குப் பாடம் சொல்லித் தந்துவிடுவேன்!

— விமலா, தூத்துக்குடி.

### காற்று வாங்கப் போங்கள்!

திருமண விழா ஒன்றில் பேசிய ஒரு பெரியவர் 'என் மனைவிக்கு கோபம் வந்தால் நான் சற்றுத் தூரத்தில் உள்ள மரத்தடிக்குப் போய் காற்று வாங்குகிற தோரணையில் நின்று விட்டு அவள் கோபம் தணிந்திருக்கும் என்று தோன்றிய பிறகே திரும்புவேன்' என்றார். எங்கள் வீட்டருகே மரங்கள் கிடையாது. அதனால் நான் என் மனைவிக்கு 'மூட் அவுட்' ஆகும் போது 'வாக்கிங்' போய்விடுவேன்!

— எஸ். பி. செல்வம், திண்டுக்கல்.

### "மௌனம் கலக நாஸ்தி!"

இந்த எழுபத்தி நான்கு வயதிலும் நான் வாசக சாலையில்தான் பாதிப் பொழுதைக் கழிக்கிறேன். என் அறிவை வளர்த்துக் கொள்ளத்தான் அங்கு போகிறேன் என்று நினைத்துவிடாதீர்கள். அது இரண்டாம் பட்சம்தான். முதல் காரணம் மனைவியிடமிருந்து தப்பித்து வீட்டை விட்டு எங்கேனும் போக வேண்டும் என்பதுதான்! காலையிலும் மாலையிலும் வேதாந்த வகுப்புக்கு வேறு போகிறேன். சாப்பாட்டு வேளைக்கு மட்டும் வீடு திரும்பும்போது 'மௌனம் கலக நாஸ்தி' (மௌனமாயிருந்தால் கலகம் இருக்காது) என்ற வாக்கைத் தேவ வாக்காகக் கொண்டு ஒழுகி வருகிறேன்.

— நாடோடி, சென்னை—17.



## அருள் வாக்கு



ராமனுக்குப் பட்டாபிஷேகம் செய்ய உத்தேசித்தபோது தன் குமாரன் ஸர்வ ஜன அபிமானத்தையும் பரிபூர்ணமாகப் பெற்றவன், ஸகல யோக்கிய தாம்சங்களையும் ஸம்பூர்த்தியாகப் பெற்றவன் என்று தசரதனுக்கு தெரிந்திருந்தபோதிலும் ஸபை கூட்டி ஜனங்களின் பலதரப்புக்களைச் சேர்ந்த எல்லா பிரதிநிதிகளின் அபிப்ராயத்தையும் கேட்டார் என்று சொல்லியிருக்கிறது. அதிலே வைதிக தர்மத்துக்கு வேறாக இருந்த மிலேச்சர்களுடைய பிரதிநிதிகளைக் கூட வரவழைத்து ஆலோசனை கேட்டாரென்று இருக்கிறது. அதுதான் நிஜமான ஜனநாயகம். அதாவது அபிப்ராயங்களைக் கேட்பதில் அவர் இவர் என்ற பேதமில்லாமல், யோக்கிய தாம்சம் பார்க்காமல் எல்லாருடைய பிரதிநிதிகளையும் கலந்து கொள்ளத்தான் வேண்டும்.

இப்படி ஸகல ஜன பிரதிநிதிகளிடமும் அபிப்ராயம் கேட்ட பின் தசரதர், ராமர் முதலான அரசர்கள் எப்படி முடிவு எடுத்தார்கள் என்று பார்க்க வேண்டும். **Policy making** (கொள்கை வகுப்பது) அநேக திட்டங்களைப் போடுவது என்பதாக முடிவுகள் செய்யும்போது அங்கே ஜனநாயக சமத்துவத்துக்கு இடம் தரவில்லை. ஞான, சீல, வயோவ்ருத்தர் என்று அநேக யோக்கிய தாம்சங்களைப்பெற்றபரமதர்மிஷ்டர்களான மந்திரிகளையே மூலஸ்தம்பமாகக் கொண்டுதான் தசரதரும் அவருக்கு முன்னாலிருந்த ரகுவம்ச ராஜாக்களும் பின்னால் வந்த ரகுராமனும் முடிவுகள் எடுத்திருக்கிறார்கள்.

பொது ஜன அபிப்பிராயத்தை ராமர் எப்படி வெகு முக்யமான விஷயமாகக் கேட்டறிந்து வரச் செய்தார். அதற்காக எப்படித் தன்னுடைய பிரிய பத்னியையே தியாகம் செய்தாரென்பது நமக்குத் தெரிந்ததுதானே? இப்போதுள்ள ஜனநாயகவாதிகளில் யாராவது அப்படி ஜன அபிப்பிராயத்துக்கு மதிப்புத் தருவார்களா என்று தெரியவில்லை. இதிலிருந்து அக்காலத்தில் ஜனங்களுக்கு ராஜா—ராணியைப் பற்றிக் கூட எவ்வளவு சுதந்திரமாக வாய்விட்டு அபிப்ராயம் சொல்ல உரிமை இருந்திருக்கிறது என்பதும் தெரிகிறது. அதுதான் உண்மை ஜனநாயகம்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

# தஞ்
# வறட்
# தமிழக
# கார



கள்ளப்பெரம்பூர் ஏரி

**த**மிழகத்தின் நெற்களஞ்சியமான தஞ்சை மாவட்டம், கொஞ்சம் கொஞ்சமாக வறண்டு கொண்டே வருவதற்குக் காவிரி நீர்ப் பங்கீட்டுப் பிரச்னையால் நீர் வரத்துக் குறைந்துபோனது மட்டுமே காரணம் இல்லை. வருகிற நீரையும், இயற்கையாகக் கிடைக்கும் மழை நீரையும் நாம் முழுமையாகப் பயன்படுத்திக் கொள்ளாமல் வீணடித்துக் கொண்டிருக்கிறோம் என்பதும் ஒரு முக்கிய காரணம். இதை நாங்கள் தஞ்சை மாவட்டத்தில் சுற்றுப் பயணம் செய்தபோது கண்கூடாகக் கண்டோம்.

தஞ்சாவூருக்கு அருகில் கள்ளப் பெரம்பூர் என்ற ஊரில் ஓர் ஏரி. அறுநூற்று நாற்பது ஏக்கர் பரப்பளவு கொண்ட அந்த ஏரியால் 2,562 ஏக்கர் நிலம் பாசனம் பெற்றுக் கொண்டிருப்பதாக அந்த ஏரிக்கரையில் நடப்பட்டுள்ள அறிவிப்புப் பலகை கூறுகிறது. ஆனால் உண்மை நிலை என்ன? "ஏரிக்குள் காடுபோல் ஆளுயரத்திற்கு மண்டிக் கிடக்கும் சிவப் புல் என்ற ஒருவகைப் புல்லால் ஏரியில் தேங்கும் நீரின் கொள்ளளவு குறைகிறது. அதனால் பாசன வசதி பெறும் நிலங்களின் விஸ்தீரணமும் குறுகி விடுகிறது. அந்தப் புற்களையெல்லாம் சுத்தப்படுத்தித் தூர் வாரினால் தேங்கும் நீரின் கொள்ளளவு அதிகரித்து, நாங்கள் இரண்டு போகம் கூட விளைவிக்க முடியும்!" என்றார் அந்த ஏரிப் பாசனத்தில் ஐந்து ஏக்கர் நிலம் வைத்திருக்கும் ராமய்யா என்ற சிறு விவசாயி.

இதே கதிதான் மன்னார்குடிக்கு அருகிலுள்ள வடுவூர் ஏரிக்கும். முந்நூற்றுப் பதினைந்து ஏக்கர் பரப்பளவுள்ள இந்த ஏரியால் வெறும் முந்நூற்று ஐம்பத்தாறு ஏக்கர் மட்டுமே பாசனமடைந்து கொண்டிருப்பது அவலம். ஏரியைத் தூர் எடுத்து ஆழப்படுத்தினால் இன்னும் ஏராளமான நிலம் பாசனம் பெறுவதோடு வெள்ளச் சேதமும் தடுக்கப்படும். தூர் எடுக்கப்படாததால்தான் கடந்த 61, 76, 83ம் ஆண்டுகளில் மூன்று முறை ஏரி உடைப்பெடுத்துச் சேதப்படுத்தியது என்றார்கள் அந்தப் பகுதி மக்கள்.

அடுத்து வேதாரண்யம் தாலுகாவை எடுத்துக் கொண்டால் அந்தப் பகுதியிலுள்ள முப்பத்தேழு ஊராட்சிகளின் பெயர்களும் புலம், கோட்டகம், ஓடை, ஆறு என்றே முடிவடையும். அத்தனையும் நீர் நிலைகளைக் குறிக்கும் பெயர்கள். அந்த அளவுக்கு ஏரிகளும், ஓடைகளும், சிற்றாறுகளும் உள்ள பகுதி அந்தப் பகுதி. அப்படியிருந்தும் அவற்றை நாம் முழுமையாகப் பயன்படுத்திக்கொள்ளாதது மிகப் பெரிய வேதனை. அதோடு சரியான திட்டமில்லாததால் வெள்ளச் சேதமும் ஏற்பட்டுப் படாதபாடு படுத்துகிறது.

"மழைக் காலத்தில் இங்குள்ள முள்ளியாற்றில் ஓடி வரும் வெள்ளம் வீணாகக் கடலில் சென்று கலக்காமல் இந்தப் பகுதிகளில் உள்ள நீர் நிலைகளில் தேக்கி வைப்பதன் மூலம் அந்த வெள்ள நீரால் மட்டுமே — காவிரி நீரின்றியே இப்பகுதியிலுள்ள ஐம்ப



# சையின்
# சிக்குத்
# அரசுதான்
# ணம்!

தாயிரம் ஏக்கர் நிலம் முழுமையான பாசன வசதிபெறும். அதோடு எங்கள் பகுதியிலுள்ள செம்போடையில் சுமார் இரண்டு கி.மீ. தூரத்திற்கு ஒரு புதுக் கால்வாய் வெட்டிக் கிழக்குப் பக்கமுள்ள உப்பனாற்றில் சேர்க்க வேண்டும். இதைச் சேர்க்காததால் செம்போடைக்கு மேற்குப் பக்கமுள்ள பத்துக்கு மேற்பட்ட ஊர்கள் தொடர்ந்து வெள்ளத்தால் பாதிக்கப்பட்டுக் கொண்டே இருக்கின்றன. மேலும் இந்தக் கால்வாய் வெட்டப்படாததால்தான் மழைக் காலத்தில் வேதாரண்யத்தின் பெரும் பகுதி வெள்ளத்தால் பாதிக்கப்பட்டுக் கொண்டே இருக்கிறது...'' என்று சொன்ன செண்பகராய நல்லூரைச் சேர்ந்தமுருகையன் என்பவர் ''இது குறித்துத் தமிழக முதல்வர் முதற்கொண்டு பலருக்கும் விரிவான வரைபடங்களுடன் திட்டத்தை அனுப்பிப் பார்த்துவிட்டேன். யாரும் கண்டு கொள்வதாகத் தெரியவில்லை!'' என்று மிகவும் வேதனைப்பட்டார்.

இப்படி நீர்த் தேக்க வசதிகளும், வடிகால் வசதிகளும்தான் சரிவரத் திட்டமிடப்பட்டுப் பராமரிக்கப்படவில்லை என்பதில்லை. பாசன வாய்க்கால்களின் பராமரிப்பும் படு மோசம் என்பதுதான் உண்மை. கும்பகோணத்திற்குப் பக்கத்திலுள்ள நீரத்த நல்லூர், மேலாத்துக் குறிச்சி, காவல்கூடம் ஆகிய ஊர்களிலுள்ள சுமார் ஐந்நூறு ஏக்கர் விளை நிலங்கள் பாசன வாய்க்கால் பராமரிப்பில்லாத காரணத்தாலேயே கடந்த பதினைந்து ஆண்டு காலமாக வறண்டு கிடக்கின்றன.

இந்தப், பகுதிக்கு வரும் பாசன வாய்க்கால், இப்பகுதியிலிருந்து சுமார் பன்னிரண்டு கி.மீ. தூரத்திலுள்ள திருவைகாவூர் என்ற ஊரில் மண்ணியாற்றிலிருந்து பிரிந்து, கொள்ளிடக் கரையை ஒட்டியே வருகிறது. கொள்ளிடக் கரையை ஒட்டியே வருவதால் கொள்ளிடத்தின் மணல் இந்த வாய்க்காலில் சரிந்து வாய்க்காலே தூர்ந்து போய்த் தண்ணீர் வராமல் வறண்டு கிடப்பதைப் பார்த்தோம்.

இந்த வாய்க்கால் 'ஏ' பிரிவு என்பதால் பொதுப் பணித் துறையினர் தூர்வாரிப் பராமரிக்க வேண்டுமே! ஏன் பராமரிக்கவில்லை? "சென்ற ஆண்டுகூட சப்—கலெக்டர் பழமலை என்பவர் வந்து இந்த வாய்க்காலைப் பார்வையிட்டார். தூர்ந்து கிடப்பதையும் அங்கங்கே உள்ள மிராசுதார்கள் வாய்க்காலையே ஆக்கிரமித்துப் பயிரிட்டுக் கொண்டிருப்பதையும் கண்டு, அந்த ஆக்கிரமிப்புகளையெல்லாம் அப்புறப்படுத்தித் தூர் வாருவதற்காகப் புல்டோசர் ஒன்றையும் அனுப்பி வைத்தார். புல்டோசரும் வந்தது. ஆனால் வந்த வழியாகவே திரும்பிப் போய்விட்டது. இடையில் என்ன நடந்தது? யார் போய் யாரைப் பார்த்து என்ன கொடுத்தார்களோ தெரியவில்லை.....!'' என்று பெருமூச்சோடு சொன்னார் காவல்கூடத்தைச் சேர்ந்த குருமூர்த்தி என்பவர்.

திருவாரூருக்குப் பக்கத்திலுள்ள ஒட்டக்குடியிலும் இதே பிரச்னைதான். வெட்டாற்



25 அடி அகலம் இருக்க வேண்டிய வாய்க்கால் இது. இப்போது ஆறு அடி கூட இல்லை!

றிலிருந்து பிரியும் ஒட்டக்குடி வாய்க்காலின் தலைப்பிடமே தூர்ந்து போய்க் கிடப்பதால் அந்த வாய்க்காலின் மூலம் ஒட்டக்குடி பகுதியில் பயனடைய வேண்டிய சுமார் ஆயிரத்து அறுநூற்றைம்பது ஏக்கர் நிலமும் சரியான பாசன வசதியின்றிக் காய்ந்து கிடக்கிறது.

ஆற்றிலிருந்து ஒரு வாய்க்காலைப் பிரிக்கும் போது அதன் அருகிலேயே — அதாவது சில கெஜ தூரத்திலேயே அந்த வாய்க்காலையும் ஆற்றையும் ஒரு தனி இணைப்பொன்று இணைக்கும். ஆற்றிலிருந்து பிரிந்து வாய்க்காலுக்குள் செல்லும் நீரின் வேகம் அதிகமாக இருக்கும். அதனால் நீரோடு சேர்ந்து சிறிது மணலும் செல்லும். அந்த மணல், வாய்க்காலிலிருந்து மறுபடியும் ஆற்றுக்கே வருவதற்காகத்தான் அந்த இணைப்பு. இது கரிகால் சோழன் காலத்திலிருந்தே கடைப்பிடிக்கப்பட்டு வரும் பௌதிக முறை. ஆனால் ஒட்டக்குடி வாய்க்காலின் தலைப் பகுதியில் இந்த இணைப்புத் தூர்ந்து போய்க் கிடப்பது பற்றிப் பொதுப் பணித் துறையினர் கண்டு கொள்ளாமலேயே இருப்பது தான் ஆச்சரியம்!

இந்த நிலை மாறி ஒட்டக்குடி முழுமையும் தடையில்லாமல் பாசன வசதி பெற வேண்டுமானால், இப்போது கொத்தவாசல் என்ற இடத்தில் பிரியும் ஒட்டக்குடி வாய்க்காலின் தலைப்பை, வெட்டாறு,ஓடம் போக்கியாகப் பிரியும் இடத்தில் ஓடம் போக்கியிலிருந்து பிரியும்படி செய்துவிட்டால் போதும்; தங்கு தடையின்றிப் பாசன வசதி பெற்றுவிட முடியும் என்று சொல்லுகிறார்கள் ஒட்டக்குடி மக்கள்.

அடுத்தபடியாகப் பூதலூர்ப் பகுதிகளிலும் இதே அவலம்தான்! இருபத்தைந்து அடி அகலம் இருக்க வேண்டிய வாய்க்கால் ஆறடி அகலம்கூட இல்லாமல் தூர்ந்தும், ஆக்கிரமிக்கப்பட்டிருப்பதையும் பார்த்தோம். 'ஏ' பிரிவு வாய்க்கால்களையெல்லாம் நவீனச் சீரமைப்புத் திட்டத்தின் மூலம் சீரமைப்பதாகக் கூறப்பட்டு காண்ட்ராக்ட் விடப்பட்டது. ஆனால் காண்ட்ராக்டர்களெல்லாம், வாய்க்காலின் இரண்டு பக்கங்களிலும் போட வேண்டிய சிமெண்ட் பலகை

கலப்படக் கலவைகளில் செய்து போட்டதால் அவையெல்லாம் உடைந்து வீணாகி விட்டன. அதனால் காண்ட்ராக்டர்கள் பயனடைந்தார்களே தவிர, விவசாயிகள் பயனடையவில்லை,' என்று உதாரணத்திற்குப் புதுச்சத்திரம் 'ஏ' பிரிவு வாய்க்காலில் உடைந்து கிடக்கும் சிமெண்ட் பலகைகளைக் காட்டுகிறார்கள் அந்தப் பகுதி மக்கள். ஆக, தஞ்சை மாவட்டத்திலிருக்கும் சுமார் 29,000 மைல் நீளமுள்ள அத்தனை வாய்க்கால்களின் கதியும் ஏறத்தாழ தூர் எடுக்காமல் தூர்ந்து போன கதைதான்!

இப்படி, தமிழகத்தின் நெற்களஞ்சியத்தை நிரப்பிக் கொண்டிருக்கும் தஞ்சை வாழ் மக்களுக்குத் தமிழக அரசு தான் தனது மெத்தனப் போக்கால் ஒரு செயற்கை வறட்சியைத் தந்து பெயர் தட்டிக் கொண்டு போக வேண்டுமா? மத்திய அரசும் தன் பங்குக்கு ஏதாவது செய்ய வேண்டாமா? அதற்கு ஓர் உதாரணம் தான் வலங்கைமான் தாலுகாவிலுள்ள சித்தன் வாழூர் என்ற கிராமம்.

இங்குள்ள சுமார் அறுநூற்று அறுபது ஏக்கர் விளை நிலமும் சுற்றியோடும் வெட்டாறு, சுள்ளானாறு ஆகிய இரண்டு ஆறுகளை விடவும் இயற்கையாகவே நான்கடி பள்ளத்தில் உள்ளது. இந்த நிலையில் இந்த ஊருக்கான வடிகால் என்பது பக்காவாகப் பராமரிக்கப்பட வேண்டாமா? அதுதான் இல்லை. அதனால் ஒவ்வொரு மழைக் காலத்திலும் வெள்ளம் வந்து விளை நிலங்களில் உள்ள பயிர்கள் வீணாவதோடு, பள்ளமான பகுதியில் வசிக்கும் ஹரிஜனக் குடியிருப்புகளும் பாதிக்கப்படுகின்றன. அதுமாதிரி சமயங்களில் உதவி கோருவதற்காக ஊரில் ஒரு டெலிபோன்கூட இல்லாததால்,குறைந்த பட்சம் போஸ்ட் ஆபீஸிலாவது ஒரு டெலிபோன் வையுங்கள் என்று மனு மேல் மனுவாகக்கொடுத்தார்களாம்.இதைப்பொறுக்க முடியாத அஞ்சல் துறையினர், போஸ்ட் ஆபீஸ் இருப்பதால்தானே அங்கு டெலிபோன் வைக்கச் சொல்கிறார்கள். எனவே, அந்த போஸ்ட் ஆபீஸையே தூக்கிவிட்டு, நடமாடும் அஞ்சல் நிலையமாக மாற்றிவிட்டார்களாம். பிறகு, 'நாங்கள் என்ன செய்ய முடியும்? நடமாடும் அஞ்சலகத்தில் டெலிபோன் வைக்க முடியாதே!' என்று சுலபமாகக் கைகழுவி விட்டுவிட்டார்களாம்! இதையெல்லாம் கதைகதையாகச் சொல்லி வருத்தப்பட்டார் அந்த ஊரைச் சேர்ந்த கே. குருமூர்த்தி என்பவர். ஆக, சரியாகச் சொல்வதென்றால் அரசாங்கமே மக்களைக் கைகழுவி விட்டுவிட்டது என்றுதான் சொல்ல வேண்டியிருக்கிறது!

— **இளங்கோவன்,**

படங்கள்: **மனோ**

# அம்மன் கோவில் கிழக்காலே



எடுத்தவுடன் ஜெயில்.ரிலீசாகிற ராதா. ரயிலேறுகிற ராதா. கோத்துப் பார்த்தால் வேறு ஏதோ படவாசனை அடித்தாலுங்கூட, 'ஒரு அடர்த்தியான கதையை டைரக்டர் சொல்லப் போகிறார் டோய்' என்று எதிர்பார்க்க வைப்பதென்னவோ உண்மைதான். பணத் திமிர். ராதா திடீரென்று விஜயகாந்த் சம்பந்தப்பட்ட அத்தனை பேரிடமும் போய் என்னை மன்னிக்கச் சொல்லுங்க என்று சொல்லும்போதே, பின்னால் ஏதோ பெரிய பள்ளம் வெட்டி வைத்திருக்கிறார் என்று யூகிக்க வைக்க, அந்த யூகம் கொஞ்சம்கூடப் பொய்க்காமல், பெண் கேட்டு வந்த இடத்தில் அவமானப்படுத்துகிற இடம் இருக்கிறதே — சுவைக்குச் சுவை, ராதாவின் நடிப்புக்கு நடிப்பு.

ஸ்ரீவித்யாவிற்குக் கௌரவ வேடமோ என்னவோ. இரண்டு மூன்று காட்சிகளில் தலையைக் காட்டுகிறார். கணவன் ரவிச்சந்திரனின் உண்மையான சொரூபத்தைச் சொல்வது மட்டுமில்லாமல், 'நீதான் வேலைக்காரி பெற்றெடுத்த ரத்தினம், அவன்தான் சொத்துக்கு உண்மையான அதிபதி' என்று சொல்லி முக்கியமான திருப்பத்தை ஏற்படுத்திவிட்டு மண்டையையும் போட்டுவிடுகிறார். கேள்வி என்னவென்றால் இந்தக் குருவி ரோலுக்கு ஸ்ரீவித்யா தேவையா?

அம்மன் கோவில் கிழக்காலே என்று பெயர் வைத்துவிட்டதாலோ என்னவோ, ராதா அலகு குத்தித் தேர் இழுக்கிறார். மண் சோறு உண்கிறார். அங்கப்பிரதட்சணம் பண்ணுகிறார். அந்தக் கொஞ்ச நேரத்தில், அடடா, நாம் இருப்பது பக்திப்பட தியேட்டரா இல்லை சமூகப்பட தியேட்டரா, அங்கே உருள்வது ராதாதானா இல்லை அம்மன் வேடநளினியா என்ற தேவையில்லாத சந்தேகங்களையெல்லாம் வளர்த்துவிடுகிறது.

ஊமைப் பெண், கணவன் போனஸ் தகராறு, சச்சரவு, சண்டை — க்ளைமாக்ஸுக்காக டைரக்டர், எப்படியெல்லாம் அவஸ்தைப்பட்டிருக்கிறார். பாவம்!

மூன்று கேள்விகள்:

1. ராதாரவி, யார்? விஜய்காந்த் ஏன் அடிபடுகிறார்? கைகாலை ரவிச்சந்திரன் வாங்கச் சொன்னாரே, ராதாரவி ஏன் செய்யவில்லை?

2. தாலி கட்டிக் கொண்ட பிற்பாடு ராதா, வி. காந்த் வீட்டுக்கு வருகிறாரே, அப்போதே 'இது போல நான் உன் அக்கா மகள் முறையாக வேண்டும்' ஆகிய இன்ன பிற விஷயங்களை ராதா போட்டு உடைப்பதற்கென்ன?

3. பரிசல், ஆறு இல்லாமல் ஒரு கிராமம் கிடையாதா? படகில் போகும் போது ஒரு பாட்டு என்கிற சுந்தர்ராஜ சென்டிமென்ட் இன்னும் எத்தனை படங்களுக்கு?

காமிரா வெகுஜோராக 'கிர்' ரடித்திருக்கிறது. இளையராஜா வெகுஜோராக ஆர்மோனியத்தைக் கையாண்டிருக்கிறார். செந்தில் காமெடி கொஞ்சம்தானென்றாலும் ரசிக்கும்படி இருக்கிறது. கடைசி கடைசியில் நன்றாக நடிக்கும் ஹீரோவும், ஹீரோயினும் சேர்ந்துவிடுகிறார்கள்.

படத்தில் அங்கங்கே அசடு வழிந்து, இழுத்துப்பிடித்துக்கொண்டு கதையை நகர்த்தினாலுங்கூட, மேற்கண்ட விஷயங்களுக்காக வேண்டுமானால் பார்க்கலாம்.

— ஜெயமன்மதன்.



மைலேஜ்
ப்ளஸ்!

**ஆம்**, உண்மையைச் சொல்லப்போனால், இது ஒரு ஒப்பற்ற, அரிய படைப்பு !

### ஆராய்ச்சியே இதன் முதலீடு

பல கோடி ரூபாய் செலவிலான மோதி காண்டினென்டல் ஆராய்ச்சியே, நிகரற்ற தொழில் நுட்பச் சிறப்புடைய இந்த R80 நைலான் கார் டயரைப் படைத்துள்ளது.

### மேலும் பல சிறப்புகள்.

உயரிய R80 ப்ரீமியம் டயர், கூடுதல் அகலம் கொண்டதால், அதிக உறுதியான பிடிமானத்தைத் தருகிறது.

சாலையில் நீங்கள் செல்லும் போது, இதுவரை அறிந்திராத அந்த ஒரு பிடிமானத்தை R80 அளிப்பதற்கு இன்னும் இரு காரணங்கள் : விஞ்ஞான ரீதியில் வடிவமைக்கப்பட்ட, 15% அதிக நான்-ஸ்கிட் டெப்த் (சருக்காமல், வழுகாமல் இருக்க 15% அதிக ஆழமுடையது) அடங்கிய ட்ரட் பரப்பு, நெளிந்து, வளைந்து அமைக்கப்பட்ட ஏழு ரிப்புகள்.

### எதிர்பார்ப்புகளுக்கு அப்பாற்பட்டது.

ஆம், இது எதிர்பார்ப்புகளுக்கு அப்பாற்பட்ட ஒரு படைப்பு இதனால் நீங்கள் ஒரு போதும் நினைத்துப் பார்த்திராத மேம்பட்ட மைலேஜ் இப்பொழுது கிடைத்திடும் வாய்ப்புள்ளது. உயரிய தொழில்திறன் அளித்திடும் இந்த வாய்ப்பினை நழுவ விட்டு விடாதீர்கள். R80 க்கு மாறுங்கள்- இனி நீங்கள் வேறெந்த டயருக்கும் மாறமாட்டீர்கள்.





## மோதி காண்டினென்டல்



ஒரு போதும் அயராத டயர்

## சருக்கம் — 6

### வாணிதாசர்

"விழிகளில் என் இந்த மோதல்?"

"என்னைப் பார்த்து இந்தக் கேள்வி கேட்டு விட்டீர்களே என்றுதான்! பாண்டியன் அவையில் ஆட மறுத்தவள் உங்களைத்தான் அந்த அம்பலத்தில் ஏற்ற விரும்பப் போகிறேன்! நான் உங்களை ஏற்றவிரும்பும் அம்பலம் பேரம்பலம்!"

"தில்லைப் பேரம்பலம்தானே?"

"சோழப் பேரம்பலம் என்றாலும் பொருந்தும்!"

"ஜோதி!"

"ஓர் உயர்ந்த மானுடனுக்குப் பின்னால் ஒரு பெண் இருந்ததாக நீங்கள் சொன்னது உண்மையானால் சோழப் பேரம்பலம்தான் உங்கள் வாழ்வின் சொர்க்கப் பேரம்பலம்! புகழின் சுந்தரப் பேரம்பலம்! எதிர்காலம் மறவாத பேரம்பலம். நான் ஒருவிதமான தீர்க்கதரிசி என்று சொன்னேனல்லவா?"

"என்னை ஆரம்பத்திலிருந்தே குழப்பிக் கொண்டு வருகிறாய்!"

"இல்லை சுவாமீ! நான்தான் குழம்பிக் கொண்டு வருகிறேன்!"

"நேரமாகிறது ஜோதி!"

"இதை நானே சொல்ல இருந்தேன். ஆனால் நான் உண்பதை நீங்கள் பார்த்து விட்டுச் செல்ல வேண்டாமா? இதோ ஒரு நொடியில்....."

ஜோதி எழுந்து, அந்த எச்சில் இலையில் அன்னமிட்டு அமுதமாக உண்கிற காட்சி....

எங்கோ தம்பூர் சுருதி கேட்கிறது....

சுந்தரர் பாடிய சுகமான தேவாரம் கொல்லிக் கௌவாணப் பண்ணில் கோகிலா குரல் கொடுத்து யாரோ பாடுவது போல் கேட்கிறது....

ஞாலம் அளந்த மேன்மை தெய்வத் தமிழுக்கு யாரோ பதம் பிடித்து ஆடுவது போன்ற நாட்டிய சொற் கட்டுகள்....

தத்தகிட தந்தீம்; இத்தகிட இத்தீம் தகதகிட தகதகிட....

அவள் அமுதமாய்ச் சிரித்து ஆனந்தமாய் உண்ணுகிறாள்....

அறுபத்து மூன்று நாயன்மார்களின் சரித்தை அளந்த இராம தேவர் சிந்தனையில்.... இப்படி எச்சில் உண்ணும் நட்சத்திர நலங் கேட்ட புதுமை....

எண்ணிப் பார்க்க ஆனந்தமாகவும் இருக்கிறது; அருவையாகவும் இருக்கிறது....

இதைவிட அருவை நாயன்மார்களின் சரித்திரத்தில் இல்லையா, என்று சிரிக்கிறாள் ஜோதி.

உண்டு முடித்து இலையை எடுத்து விட்டுக் கையலம்பி, காலில் சிலம்பொலிக்க வருகிறாள் ஜோதி.

சற்றுமுன் ஏற்பட்ட நாட்டியப் பிரமை உண்மையோ என்று எண்ணும்படி ஒலிக்கிறது அந்தச் சிலம்பு.... தமிழ்ப்பால் பற்றுக் கொண்ட சிலம்பு..... சிலம்பு என்றாலே தமிழ்தானே?"

"என் இல்லத்தில் முதன் முதலில் ஞாலம் அளந்த மேன்மைத் தமிழ் உண்ட இலையை நாளைக் காலையில் இதற்காகவே பசுவை விலைக்குவாங்கி அதனையுண்ணச் செய்வேன். 'அம்மா' என்ற தமிழுக்கே முதல் சொல்லை எடுத்துக் தந்த ஜீவனல்லவா? அந்தச் சொல் உலகளாவிய சொல்லல்லவா? பசு நம் நாட்டில் தெய்வாம்சம் பொருந்திய தேனு!"

ஜோதியை இன்னமும் புரிந்து கொள்ள முடியவில்லை. அவள் குழப்பத்தின் வெற்பில் கூத்தாடுகிறாள்.... தத்தீம்! தத்தீம்! தத்தீம்!

காலையில் மடியில் விழுந்த மாங்கனி நினைவுக்கு வருகிறது.

"ஜோதி! காலை உனது பிறந்த நாள் பரிசாக நான் கொடுத்த மாங்கனியை என்ன



செய்தாய்?''

''ஓ.... பார்த்தீர்களா? உங்கள் வருகையால் நான் அனைத்தையும் மறந்தேன். உங்களுக்கும் வைக்கவில்லை; நானும் உண்ண மறந்தேன். நீங்கள் காலையில் மன்னருடைய மடியில் விழுந்திருக்க வேண்டும் என்று சொன்னதால், அது பலித்துவிட்டது போல உங்களுக்கும் பயன்படவில்லை; எனக்கும் பயன்படவில்லை.''

இராமதேவர், மூக்கை உரசிக்கொண்டே எழுந்து கொள்கிறார். அவரது இதழ்களில் குழந்தைப் புன்னகை. அவருக்கு இனி குழந்தையே கிடையாது என்பதற்காகவே அந்த இரண்டு செவ்விய அதரங்கள் குழந்தையாய்விட்டன போலும்!

''சுவாமி! கொஞ்சம் பொறுங்கள்.''

ஜோதி உள்ளே செல்கிறாள்.

சற்றைக்கெல்லாம்மிகப்பெரிய வெள்ளித் தாம்பாளத்தில் கற்றை கற்றையாகக் கட்டப்பட்ட ஓலைச் சுவடிகளை வைத்துக் கொண்டு வந்து பாதங்களில் சமர்ப்பிக்கிறாள்.

''ஜோதி என்ன இது? எவர் பாடிய காப்பியம்?''

''மீட்டாத வீணை; பாடாத குயில்; சிலம்பு கட்டாத பாதங்கள்....''

''வெறும் ஓலைச் சுவடிகளா?''

''இராம நாமத்தைப் பெற்ற நீங்கள் சிவ நாமத்தைச் செப்பி, சைவத்தின் புரட்சித் தலைவராகிப் புவனம் வியக்கச் செய்ய, ஜோதி பதப்படுத்திய பிரகாச ஓலைகள்; எனது பிறந்த நாள் பரிசு! இந்த ஓலைகள் செப்பும் உன்னதக் கதைகள், இந்த வாலைக் குமரியின் சலங்கையில் ஊர்தோறும், நகரந்தோறும், நாடுகள் தோறும் ஒலிக்க வேண்

கோ.வி.மணிசேகரன்



# மாண்புமிகு முதலமைச்சர்

டும், பிரபோ, ஒலித்தே தீர வேண்டும்.''

ஜோதியின் கண்களில் சரம்சரமாகக் கோத்து உதிர்ந்த நீர்முத்துக்கள் ஓலைச் சுவடிகளை அர்ச்சிக்கின்றன.... ஒரு சந்நதக்காரியைப் போன்ற ஆவேசம்....

ஓ.... ஜோதி இப்போதுதான் கொஞ்சம் புரிகிறுள்; புரிபடுகிறுள்....

நிறைவான நெஞ்சுடன் அவர், இரு கரங்களால் அந்தத் தாம்பாளத்தை எடுக்கிறுர்.

''வல்லரசி!'' என்று குரல் விடுக்கிறுள் ஜோதி.

ஓடோடி வந்து நிற்கிறுள் வல்லரசி.

''இந்தத் தாம்பாளத்தைப் பெற்றுச் சென்று மாண்புமிக்க இவரின் பல்லக்கில் வை!''

தாம்பாளத்தைப் பெற்றுச் செல்கிறுள் வல்லரசி.

''அது என்ன 'மாண்புமிக்க இவரின்...' ஜோதி?''

''எல்லாரும்மாண்புஎன்னமகோன்னதச் சொல்லுக்கு மிக்கவர்களாய் விட முடியாது. அந்தமாட்சிமைக்குரியவர் செயற்கரிய செய்தவராக இருக்க வேண்டும்! நீங்கள் அத்தகையவர். எனவேதான் மாண்புமிக்கவராகிறீர்கள்!''

''சரியாகச் சொன்னுய் பெண்ணேமிகச் சரியாகச் சொன்னுய்!''

எவருடைய குரல்....?

திரும்பிப் பார்க்கிறுர்கள்....

வாசற்படியில்....

சோழப் பேரரசின் சுந்தரமாப் புருஷன் குலோத்துங்க மாமன்னன், மீசையை நீவிவிட்ட வண்ணம் நிற்கிறுன்.

''சோழ மாமன்னு நீங்களா?''

இராமதேவரின் நாவு வியப்பால் துடித்தது.

ஜோதியோ ஓடிச் சென்று பணிகிறுள்: ''கவியரசின் பாதம் பட்டு இந்த மாளிகை செய்த புண்ணியத்துடன் புவியரசின் பாதம் பட்டு மேலும் புண்ணியமடைகிறது. உள்ளே வரலாமே!''

''இல்லை பெண்ணேநேரமாகவே இராமதேவரைத் தேடினேன். ஒட்டக்கூத்தர் விருந்தையும் மறுத்து, வேறு எங்கோ அடியவர் வீட்டு விருந்து என்று புறப்பட்டாராம். விசாரித்து வந்து பார்த்தேன். இங்கே நீ கூறிய மாண்புமிகு விளக்கம் மனத்தைக் கவர்ந்தது. நீ யார் பெண்ணே?''

இராமதேவரே, ஜோதியின் கதையை, எச்சில் இலையை நீக்கி ஏனையவற்றைப் பிரகாசத்துடன் சொல்லி முடிக்கிறுர்.

''ஓகோ, ஓகோ'' என்று கேட்டு வந்த குலோத்துங்கச் சோழ மாமன்னன், ''ஜோதி! உனது இந்தத் தொடர்பில் சிகரமானது எது தெரியுமா? ஓலைச் சுவடிகளைக் கொடுத்தாயே! அதுதான்! வாழ்க உனது முயற்சி! புறப்படலாமா இராமதேவரே!'' என்றுன், சோழமாமன்னன்.

இராமதேவர் புறப்பட்டார்.

''சோழர் திலகமே! என் வீடு தேடி வந்து உங்களை வெறுமனே அனுப்புவதா? கொஞ்சம் பொறுங்கள்!''

தேர்ந்த ஓவியன் எழுதிய சித்திரத்துக்குப் பிரமன் உயிர் கொடுத்துவிட்டது போல, சிலம்பின் குரல் இனிக்க ஒசிந்து உள்ளே ஓடுகிறுள் ஜோதி.

குலோத்துங்க சோழ மாமன்னன், இராமதேவரை நோக்கிச் சிரித்த அந்தச் சிரிப்பு...

அதற்கு அர்த்தம் தேடுவதற்குள்....

கையில் மாங்கனியுடன் வந்து நின்றுள். மெய்யில் இரு மாங்கனிகளைப் பெற்ற மேனகை வெட்கும் மேனியினள் ஜோதி.

''மன்னர் பெருமானே! காலையில் இவர் சொன்னுர். இது மன்னர் மடியில் விழ வேண்டிய மாங்கனி என்று! என்ன பொருத்தம் பார்த்தீர்களா? அது உங்களுக்கே வந்து சேருகிறது. புலவர் வாக்குப் பொய்க்காது.''

''எல்லாப்புலவர்வாக்கும்என்றுசொல்லிவிட முடியாது ஜோதி. தெய்வமாப் புலவர் வாக்குப் பொய்க்காது'' என்று கூறிவிட்டுச் சோழமாமன்னன் பார்த்த பார்வை, அந்தப் பார்வையைத் தனது பார்வையில் விழுங்கி, தரையில் கால்பெருவிரலால் ஜோதி வரைந்த மாங்கனிச் சித்திரம் — இவற்றை இராமதேவர் அறிய நியாயமில்லை.

தம்மை மன்னன் தெய்வமாப், புலவர் என்று கூறியதும், 'நமச்சிவாயம்' என்று மனம் ஜபிக்கக் கண்களை மூடித் தியானத்தில் ஆழ்ந்துவிட்டாரே! எங்கே கவனிக்க முடியும்?

''புறப்படலாமா புலவர் பெருமானே?''

''ஆகா'' என்று கண் விழிக்கிறுர்.

''என்ன சிந்தனை?''

''நமச்சிவாய சிந்தனை! நாதன், இந்த மாங்கனியின் மூலம் நடத்திய திருவிளையாடலை எண்ணிப் பார்த்தேன்.''

''எல்லாம் நன்மைக்குத்தான். புறப்படுங்கள்.''

இராமதேவர், ஜோதியிடம் விடை பெறுகிறுர்.

ஜோதியோ கழல் பணிகிறுள்.

மாளிகையின் வெளிவாசலுக்கு வருகிறுர்கள்.

''இராமதேவரே! நீங்கள் எனது ரதத்தில் ஏறிக்கொள்கிறீர்கள். அந்தஜோதிவடிவான ஓலைச் சுவடிகள் தனித்த பெருமையுடன் பல்லக்கில் வரட்டும்!''

குலோத்துங்க சோழமாமன்னன் ஜோதியைக் கவனிக்கிறுர்.

நாணித் தலைகுனிந்து, பின் தலை நிமிர்ந்து வணங்கி விடை தருகிறுள்.

ரதம் புறப்பட்டது; பல்லக்குப் பின் தொடர்ந்தது.

**ம**றுநாள் புலரியம் குலோத்துங்கச் சோழன் பிள்ளைத் தமிழோடு புலருகிறது. இந்தப் புலரியத்தில்தான் சைவ சமய சரித்திரத்தின் மாற்றமே அடங்கிக் கிடக்கிறது என்பது போலச் சூரியன் தனது பொற்கிரணங்களைச் சூரிய குலமாம் சோழர் குலத்தின் மீது படியச் செய்து வாழ்த்துகிறுன்.

பிள்ளைத் தமிழ் அரங்கேற்றம் சோழரது

அமைச்சர்: 'யுத்தத்துக்குத் தயாரா'ன்னு ஒரே ஒரு வரி மட்டும் ஓலையில் எழுதியனுப்பியிருக்கான் பக்கத்து நாட்டு அரசன். என்ன பதில் எழுதுவது பிரபு?

அரசன்: நீரும் ஒரே ஒரு வரி மட்டும் எழுதி அனுப்பும்... 'சரணடையத் தயார்'னு!

— ஒ. ராஜாஜி.



புகழ் பெற்ற அத்தாணி மண்டபத்தில் முறைப்படி நடைபெற்றுக் கொண்டிருக்கிறது.

அகன்ற பொன்னாலான சப்பரத்தில் அமர்ந்து ஓங்கு புகழ் ஒட்டக்கூத்தர், பிள்ளைத் தமிழைப் பருவம் பருவமாகப் பாடிக் கொண்டு வருகிறார்....

ஆ! தமிழோ! தேனோ? தேவர்தம் அமுதோ?

வியக்காதார் யார்? வினா எழுப்பிக் கொள்ளாதார் யார்?

சிம்மாசனத்தில் சிங்கம் போன்று குலோத்துங்க சோழ மாமன்னர். இடப்புறத்தே புவன முழுதுடையாளான பட்டத்தரசி தியாகவல்லி தேவியார்.

தனித்து முக்கோக்கிழானடி தேவியாரும் சிறுவன் இராசராசனும் அமர்ந்திருக்கின்றனர்.

நடுநாயகமாகக் குன்றத்தூர் தந்த குங்குமத் தமிழ்ச் செல்வர் இராமதேவர், பொன்னாசனத்தில் அமர்ந்து பிள்ளைத் தமிழில் ஆழ்ந்து இருக்கிறார்.

சுற்றிலும் அவைப் புலவர்களான தண்டி, மருதத்தூருடையார் குன்றன் திருச்சிற்றம்பலமுடையார், நம்பி காளியார், நெற்குன்ற வாணமுதலியார் முதலானோர்.

அப்போதைய அமைச்சர்களான விக்கிரம சோழ சம்புவராயர், ஏழிசை மோகன் காடவராயர் ஆகியோர் அமர்ந்திருந்தாலும், பிள்ளைத் தமிழா அவர்களுடைய செவிகளில் நுழைந்தது. கண்களின் வாசலில் இராமதேவர் நின்றல்லவா கடுகடுத்துக் கொண்டிருக்கிறார்! இங்கே நாங்களிருக்க, இந்த இராமதேவனை ஏன் முதலமைச்சர் பதவிக்காக இப்படியெல்லாம் மூக்கணாங் கயிறு போட்டுப் பிடிக்க முயல வேண்டும் என்கிற எரிச்சல்; காழ்ப்புணர்ச்சி!

சுற்றிலும் அரசு அதிகாரிகள்.

இராமதேவர் கண்களை இறுக மூடி, செவிகளை நன்கு திறந்து *குலோத்துங்க சோழன் பிள்ளைத் தமிழில் ததுரகவித்துக் கொண்டிருக்கிறார்.

காப்புப் பருவம் முதல் சிறுதேர்ப் பருவம் வரையிலான பத்துப் பருவங்களிலும் பாகு தமிழின் இனிப்போ, இனிப்பு...!

பிள்ளைத் தமிழைப் பல்லோர் மயங்கப் பாடி முடிக்கிறார் ஒட்டக்கூத்தர்.

அவையில் அமைதி.....

இராமதேவர் மட்டும் தலைமை தாங்கி இராவிடில், ஏனையவர்கள் இந்நேரம் எப்படியெல்லாம் புகழொலியை எழுப்பி இருப்பார்களோ?

அவைக் குரவராயிற்றே ஒட்டக்கூத்தர்?

மண்டபத்தில் அமைதியோ அமைதி.

இன்னமும் இராமதேவர் கண்களை மூடிக் கொண்டே இருக்கிறார்.

தூங்கிவிட்டாரா?

அமைச்சர்களாயிருந்த இருவர் இவ்வாறு அருவருப்பின் காரணமாக முணுமுணுக்கின்றனர்.

ஒட்டக்கூத்தர் ஒன்றும் புரியாமல் கவனிக்கிறார்.

சோழமாமன்னன் அரியணையை விட்டு மெல்ல எழுந்து வந்து கவனிக்கிறார்.

ஏனிந்த மோனநிலை?

"இறவாத் தமிழ் தந்த இராமதேவரே! ஏனிந்த மோனம்?"

கண்களை மூடிக்கொண்டே இராமதேவர், தமது நாவை விழிக்கச் செய்கிறார்: "தமிழை இவர் பிறர் மனத்தில் ஒட்ட வைப்பதால் இவர் ஒட்டக்கூத்தரானாரோ! அந்தத் தில்லையில் வாழும் கூத்தபிரான், இந்தக் கூத்தபிரான் நாவிலன்றோ திருநடம் புரிகிறான்!"

கண்கள் விழிக்கின்றன.

எழுந்து வந்து ஒட்டக்கூத்தரை இருகரத்தால் அணைத்துக் கொண்டு.....

"நீங்கள் வாணியின் அருள் பெற்ற வாணிதாசர்! என்ன பாடினீர்கள்....? ஆ (ங்)! 'கோடியர், புலவர், விறலியர், பாணர், குலகிரிகளும் குறை நிறையத் தேடிய நிதியங் குலோத்துங்கசோழன் உருட்டுகசிறுதேரே!'— ஓ..... 'புலவர்' என்று குறிப்பிட்டதில் யானும்அடங்குவேனோகூத்தர்பெருமானே?"

என்னே அவையடக்கமான கேள்வி இது!

ஒட்டக்கூத்தரே பிரமித்துப் போனார்.

அடுத்து ஒட்டக்கூத்தரும் சோழமாமன்னனும் நடத்த இருக்கும் நாடகப் பிரமிப்புக்கு, இராமதேவர் தவிக்கப் போகிற நிலை அவருக்கே தெரியாதல்லவா?

(தொடரும்)

* குலோத்துங்கச் சோழன் பிள்ளைத் தமிழைப் பாடியதாகச் சில ஆராய்ச்சியாளர் கூறுவர். இதை மறுக்கவும் சான்று உண்டு.

# ராகுலாவாய் மாறுகிறாளா...?

தேவிபாலா

அவர் சொன்னதைக் கேட்டதும் துல்லியமாக அதிர்ந்தான் பிரசன்னா.

வார்த்தைகளை நம்ப முடியாமல் அவரைக் கூர்மையாகப் பார்த்தான்.

தலை கலைந்து..... ஓடி வந்த வேகத்தில் விழுந்திருக்கலாம் என்று தோன்றியது. சட்டையில் புழுதி. முழங்கையில் சிராய்ப்பு. மேல் மூச்சு கீழ் மூச்சு வாங்கும் மார்பு.

''முதல்லே உட்காருங்க.... ரிலாக்ஸ்.''

''நோ ஸார்! எனக்குப் பயமா இருக்கு. நான் இங்க உட்காரக் கூடிய ஒவ்வொரு விநாடியும் என் குழந்தைக்கு ஆபத்து. என் மனைவி, குழந்தையைக் கடிச்சு ரத்தத்தை உறிஞ்சறதை என் கண்ணாலப் பார்த்தேன். அவளைப் பூட்டி வச்சிட்டுக் குழந்தையைப் பக்கத்து வீட்டு ஆயாகிட்டே குடுத்துட்டு வந்திருக்கேன். இன்ஸ்பெக்டர் ராம் ஊர்ல இல்லேனு சொன்னாங்க... அதான் உங்களை விசாரிச்சாத் தெரியுமேன்னு வந்தேன்.''

''கதவைப் பூட்டிட்டீங்க இல்ல; உட்காருங்க!''

''இல்லே ஸார் வந்து.....''

''ஸிட் டௌன் ஐ ஸே!''

பிரசன்னா அதட்ட தடக்கென உட்கார்ந்தார். மேஜையின் மேல் முகத்தைக் கவிழ்த்துக் கொண்டார். முதுகு குலுங்கியது.

''மிஸ்டர் நாகேஷ், குழந்தையை டாக்டர் கிட்டே கூட்டிட்டுப் போனீங்களா?''

''காரணம் கேட்டால் எதைனு நான் சொல்லுவேன் பிரசன்னா....? பெண்டாட்டி கடிச்சான்னு சொல்ல முடியுமா? ஆயா ஏதோ பச்சிலைச் சாறு பிழிஞ்சு கட்டுப் போட்டிருக்கா. எனக்குப் பைத்தியமே பிடிச்சிடும் போல இருக்கு!''

''நான் கேக்கற கேள்விக்குப் பொறுமையா பதில் சொல்வீங்களா?''

''கேள்விக்கு இதுவா நேரம்? ம். கேளுங்க!''

''உங்களுக்குக் கல்யாணம் முடிஞ்சு எத்தனை வருஷம் ஆச்சு?''

''இந்தக் கல்யாணம் முடிஞ்சு மூணு வருஷம் ஆச்சு!''

''இந்தக் கல்யாணம்னா?''

''இது எனக்கு ரெண்டாவது கல்யாணம்!''

''ஐ. ஸீ! முதல் மனைவி?''

''அவள் பிரசவத்துல செத்துட்டா ஒரு பையனைத் தந்துட்டு. கிட்டத்தட்ட ஆறு வயசு வரைக்கும் நானேதான் அவனை வளர்த்தேன். ஒரு லெவலுக்கு மேல் குடும்பத்தையும், வெளி விவகாரங்களையும் தனியா என்னால் சுமக்க முடியலே. இவனோட குறும்பும் அதிகமானப்ப, அவனுக்கு ஒரு தாய் அவசியம்னு பட்டுது எனக்கு.....!''

''காரணம் அது மட்டும்தானா?''

''அதுவும் ஒரு காரணம். நானும் கிழவனாகலையே.... எனக்கும் உணர்வுகள் தூங்கலே பிரசன்னா. அதனால ரெண்டாவது கல்யாணத்துக்குச் சம்மதிச்சேன். அது முடிஞ்சு அடுத்த வருஷமே மோகன் பிறந்திட்டான். இப்ப ரெண்டு வயசு அவனுக்கு.''

''உங்க ரெண்டு பேருக்கும் நடுவுல சண்டை உண்டா?''

''இதுவரைக்கும் இல்லே.''

''உங்க முதல் பிள்ளையை நல்லாக் கவனிக்கிறாங்களா மனைவி?''

''பெத்த தாய் போல் இருக்கா! ஆனால் கொஞ்ச நாளாப் பைத்தியம் பிடிச்ச மாதிரி நடந்துக்கறா. தலைவிரி கோலமாக் கூச்சல் போடறா.... திடீர்னு நடு வீட்டில் உட்கார்ந்து ஒப்பாரி வைக்கறா.... நான் என்ன கேட்டாலும் பதிலே பேச மாட்டேங்கறா. ஒரு பைத்தியக்காரிக்கு உள்ள சகல அம்சங்களும் அவகிட்டே இருக்கு. டாக்டர் கிட்டக் காட்டியாச்சு. மந்திரம், தந்திரம், பில்லி சூன்யம் அத்தனை முயற்சிகளையும் செஞ்சாச்சு. காசு தண்ணியாச் செலவாகி, நானும் பைத்தியம் போலாயாச்சு. காரணமே எனக்குப் புரியலே....''

''உங்களுக்கு நண்பர்கள் நிறைய உண்டா?''

''விரல் விட்டு எண்ணிடலாம். அதுவும் இவளோட நடவடிக்கைகள் தெரிஞ்சு யாருமே வீட்டுப் பக்கம் இப்ப எட்டிக் கூடப் பார்க்கிறதில்லே. நான் ஒரு தீவா மாறித் தத்தளிக்கிறேன் பிரசன்னா....''

''டாக்டர் என்ன சொல்றார்....?''

''ஒரு சைக்யாட்ரிஸ்ட் கிட்டே போனேன். அவர் ஹிப்னடைஸ் பண்ணி உன் மனசைப் படிச்சா, ட்ரீட்மெண்டை ஆரம்பிக்கலாம்னு சொன்னார்.''

''செஞ்சீங்களா?''

''விடலையே! அதுக்கப்புறம் டாக்டர்னு சொன்னாலே ஆர்ப்பாட்டம் உச்சகட்டத்துக்கு வருது பிரசன்னா.... கிணத்துல குதிப்



பேன்னு சொல்ரு. சண்டாளி இவ ஒழியட்டும். ஆனு கையில் அந்த பிஞ்சுக் குழந்தையும் இருக்கே....

"இப்ப வெறி முத்தி, தான் பெத்த குழந்தையைக் கட்டிக்கற அளவு போயாச்சு. டிராகுலாவா மாறிட்டு வர்ரு.... ஸம்திங் ஸினிஸ்டர்!"

நெற்றியைத் தேய்த்துக் கொண்டான் பிரசன்னு.

"ம்! உங்க முதல் தாரத்துப் பிள்ளையை இது போல ஏதாவது செய்ய முயற்சி செஞ்சிருந்தாலும் ஓரளவு ஒப்புக்கலாம்... அது கூட — ஒரு ஸ்டெப் மதர் கொலை செய்யற அளவு துணிவாளாங்கறது சந்தேகம். அப்படியிருக்க, தான் சுமந்த பிள்ளையைக் கடிச்சு, ரத்தத்தை.... நோ. இதுல வேறே ஏதோ பிரச்னே இருக்கு!"

"ஏதுவுமில்லே, ஷீ ஈஸ் மெண்ட்டலி டிஸ் ஆர்டர்டு!"

"வெல்,. நீங்க புறப்படுங்க மிஸ்டர் நாகேஷ். நான் சாயங்காலம் உங்க வீட்டுக்கு வர்றேன்!"

சின்ன இரும்பு கேட். மேல் கொக்கியை விடுவித்துத் திறந்தபோது 'க்ரீச்' என்ற ஓசையோடு எண்ணெய் வேண்டும் எனக்கு என்றது....

நாய் ஒன்று எட்டிப் பார்த்துக் குரைக்காமல் முறைத்தது.

சுஜாதாவின் 'ஜுனே' போல் தேன் கலரில் கோலிக் கண்களோடு பார்த்தது.

கதவை நெருங்கி 'காலிங் பெல்'லில் கை வைக்க 'பெள்' என்றது...

"டாமி... சும்மாரு!" குரலைத் தொடர்ந்து

ஒரு பையன் எட்டிப் பார்த்தான்.

"நாகேஷ் இருக்காரா?"

"டாடி!" (இவன்தான் முதல் பிள்ளையோ?)

தூங்கியோடு, கண்களில் தூக்கம் மிச்சமிருக்க, வெளியில் வந்த நாகேஷ், "வாங்க மிஸ்டர் பிரசன்னா. சீக்கிரமே வந்துட்டீங்க!" என்றான்.

"பிரச்னை எதுவுமில்லையே!"

"மண்டையிருக்கிற வரைக்கும் சனிதான். ரொம்ப நேரமா ஆர்ப்பாட்டம். தண்ணில காம்போஸைப் பொடிசெஞ்சு போட்டுத் தூங்க வச்சிருக்கேன்."

"எதுக்கு?"

"குழந்தையைத் தரணுமாம். ஆயா பார்த்துக்கக் கூடாதாம். அலறித் தெருவைக் கூட்டிட்டா."

"நான் பார்க்கலாமா?"

வெராந்தா போலிருந்த அந்தப் பகுதியைக் கடந்து, வலதுபுறம் திரும்ப, பூட்டை அணிந்து கொண்டிருந்தது அந்த அறை. திறந்தார் நாகேஷ்.

உள்ளே நுழைந்தான் பிரசன்னா....

"ஜாக்கிரதை பிரசன்னா... வெறி முத்தியிருக்கு!" வெளியில் நின்றபடி சொன்னார் நாகேஷ்.

சுருண்டு படுத்திருந்த அந்தப் பெண் ஒடிசலாக இருந்தாள். அதிகம் போனால் முப்பது கூட இருக்காது. கோதுமை நிறம். களையான முகம். தூங்கும் முகத்தில் கூட ஒரு பீதி. வாய்மட்டும்சன்னமாகஏதோ முணுமுணுக்க மண்டியிட்டு உட்கார்ந்து முகத்தருகில் காதைக் கொண்டு போனான் பிரசன்னா.

"மோகன்.... மோகன்..."

தூக்கத்தில்கூடக் குழந்தையின் நினைவான இவளா கடிப்பாள்?

புரண்டு படுத்த அவள் சட்டெனக் கலைந்து அவசரமாக எழுந்து, எதிரே பிரசன்னாவைப் பார்த்ததும் கலைந்த மேலாக்கைச் சரி செய்து கொண்டு, "நீங்க யாரு? எதுக்காக என் அறைக்குள்ள....?" என்று கேட்டாள்.

"ஸ்.... கூச்சல் போடாதம்மா. உன்னைக் காப்பாத்த வந்திருக்கேன்."

அவள் அவசரமாக வாயைத் திறக்கச் சைகையால், அவளை நிறுத்திவிட்டுக் கதவருகில் வந்த பிரசன்னா, "மிஸ்டர் நாகேஷ், நான் தனியா உங்க மனைவியைச் சில கேள்விகள் கேக்கணும். ஆட்சேபணை உண்டா?" என்றான்.

"தாராளமாக் கேளுங்க பிரசன்னா. அவ குணமானாச் சரி!"

(அனுமதிக்கிறானே! இவன் நல்லவன் தானா?)

உள்ளே வந்தான் பிரசன்னா.

"சொல்லும்மா. என்னை உன் ஸ்நேகிதனா நினைச்சுக்கோ. என்ன உன் பிரச்னை?"

"எனக்கு மோகன் வேணும். வேறே எந்தப் பிரச்னையும் எனக்கில்லே!"

"ஏன் அவனைக் கடிச்சே?"

"என் பிள்ளையை நான் என்ன வேணும்னு

# ஒரு மினி பேட்டி!



"என்ன கணேசன் சௌக்கியமா?"

"இருக்கேங்க... அபிராமி அருளாலே!"

"வார்டு மெம்பரா இருக்கீங்க போலிருக்கு?"

"ஆமாங்க!"

"சரி, உங்க முதல் வேலை என்னங்க?"

"இந்தத்தண்ணீர் டாங்கைத்திறக் கணுங்க. எங்க (தி. மு. க.) ஆட்சியிலேயே டாங்க் மோட்டார் எல்லாம் வைச்சாச்சுங்க. ஆனாலும் இத்தனை வருஷமா திறக்காம இருக்காங்க! இதைத் திறக்கச் செய்யறதுதாங்க எங்கபஞ்சாயத்தோட முதல்வேலை!"

"பெஸ்ட் ஆஃப்லக்!" கணேசன்.

— தஞ்சை மாவட்டம் திருக்கடையூரில் நாங்கள் நடத்திய ஒரு பேட்டிதான் இது. அங்கு மட்டும்தான் இப்படி என்பதில்லை. அளக்குடி, திருநெல்லிக்காவல் என்று பல ஊர்களில் கட்டி முடித்துப் பம்ப்செட் வைக்கப்பட்ட டாங்குகள் பல்லாண்டு பல்லாண்டுகளாகத் திறக்கப்படாமல் பாழடைந்து கொண்டுதான் இருக்கின்றன. இதை நாங்கள் கண்கூடாகவே கண்டோம். ஏன் இப்படி? எதற்காக இப்படி மக்கள் பணத்தைவீணாக்குகிறது அரசு? வேதனைக்குரிய விஷயம் மட்டுமல்ல; அரசை நினைத்து வெட்கப்பட வைக்கும் விஷயம் கூட!



## அறிமுகப்படுத்துகிறோம்!

# புதிய ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர்

## அது வேர்க்குருவிற்கு விரைவாக நிவாரணமளிப்பது மட்டுமல்ல, உண்மையிலேயே அதைத் தடுத்திட உதவுகிறது.

**நீங்கள் வேர்க்குருவைத் தடுக்க முடியும்போது அது தாக்கும்வரை ஏன் காத்திருக்க வேண்டும்?**

இப்போது, உங்கள் வேர்க்குரு பிரச்சினையைக் கட்டுப்படுத்த இன்னும் மிகத் தீவிரமான வழி— புதிய ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர். அது வேர்க்குருவிற்கு விரைவாக நிவாரணமளிப்பது மட்டுமல்ல உண்மையிலேயே அதை தடுத்திட உதவுகிறது.

**புதிய ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர் ஏன் மிகவும் தீவிரமானது?**

உங்களுக்கு அதிகமாக வியர்த்து, அந்த வியர்வை உங்கள் சருமத்தில் அதிக நேரம் தங்கியிருக்கும்போது, வேர்க்குருவின் தாக்குதலுக்கு நீங்கள் ஆளாகிறீர்கள். அதனாலேதான் புதிய ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர் மிகவும் தீவிரமானதாகத் தயாரிக்கப்பட்டுள்ளது. வியர்வையை நன்றாகவும் விரைவாகவும் உறிஞ்சும் வண்ணம் விசேஷமாகத் தயாரிக்கப்பட்டுள்ளது அது— உங்கள் சருமத்தில் பாக்டீரியாக்கள் பெருகுவதைத் தடுக்கிறது— ஆகவே வேர்க்குரு இல்லை, எரிச்சல் இல்லை, நமைச்சல் இல்லை. அப்பாடா என்ன நிவாரணம்! அதற்கும்மேல் புதிய ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர், இப்போது மகிழ்ச்சிதரும் புதிய நறுமணமும்* கொண்டுள்ளது

வரும் கோடையில் வேர்க்குரு தாக்கும் வரை காத்திருக்காதீர்கள். விரைந்து வாங்கிடுங்கள் ஒரு பேக் புதிய ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர். வேர்க்குருவை நீங்கள் தடுக்க முடியும்போது, வேர்க்குருவால் ஏன் சிரமப்பட வேண்டும்?

விசேஷமாகத் தயாரிக்கப்பட்டுள்ள தூள்துகள்களின் செயல்முறைதான்.


வியர்வையை நன்றாகவும் விரைவாகவும் உறிஞ்சுகிறது.


சருமத்தில் பாக்டீரியாக்கள் பெருகுவதைத் தடுப்பதற்கான விசேஷ மருந்துக் கலவை கொண்டது.


சருமத்தைக் குளிர்ச்சியாகவும் புத்தம் புதுமையோடும் வைத்துக் கொள்கிறது. அதன் இதமான செயல்.




*சந்தன மணத்திலும் கிடைக்கிறது.

Johnson & Johnson

OBM-4181 TAM

னும் செய்வேன். கேக்க நீங்க யாரு?

இது நிஜமா, இல்லே இவள் நடிக்கிறுளா?

''பெத்த பிள்ளையைக் கொல்ல எந்தத் தாய்க்கும் உரிமை கிடையாதம்மா!''

முகத்தைமூடிக்கொண்டு அழத்தொடங்கினுள்.

''எனக்கொரு உதவி செய்வீங்களா?''

''சொல்லு! கட்டாயம் செய்யறேன்...''

''என் மோகனை எங்கிட்டத் தந்துடுங்க. அவன் வெளியில் இருக்கக் கூடாது. ப்ளீஸ்!''

''நீ அவனைக் கொன்னுடலாம்னு நாகேஷ் பயப்படரூர்!''

''நானு.... என் பிள்ளையையா?''

''பின்னே ஏன் கடிச்சு, ரத்தத்தை உறிஞ்சினே? அது நிஜம்தானு?''

''ஆமாம்....! என் பிள்ளையைத் தாங்க!'' திடீரென்று ஆவேசம் வந்தவள் போல அலறி அழத் தொடங்க, வெளியில் வந்தான் பிரசன்னு.

''என்ன பிரசன்னு?''

''குழப்பம் நிறைய இருக்கு! கொஞ்சம் ஐஸ் வாட்டர் கிடைக்குமா? குழந்தை எங்கே?''

''விக்ரம் ஆயாகிட்டேயிருந்து தம்பியை வாங்கிட்டு வர்றியா?''

''வேணும்.... வேணும்... மோகன் ஆயா கிட்டேயே இருக்கட்டும்!'' என்ற அலறல் உள்ளேயிருந்து வந்தது....

பிரசன்னுவுக்குள் ஏதோ நெருட, குழந்தை வந்தது.

கொழுக்.... மொழுக்கென்று அபாரமாக இருந்தது. பிரசன்னுவைப் பார்த்துக் கன்னம் குழியச் சிரித்தது. அதை வாங்கி மடியில் வைத்துக் கொண்ட நாகேஷ், ''இங்க பாருங்க பிரசன்னு!'' என்ருன்.

ஜட்டியை விலக்கித் தொடையின் உள் பக்கம் காட்டினுர். மருந்து வைக்கப்பட்டிருந்தது. ''இங்கதான் கடிச்சிருக்கா. பிஞ்சு, பிரசன்னு. இதுக்கு ஏதாவது ஆச்சுன்னு, நான் உயிரோடவே இருக்க மாட்டேன்...''

அதை அள்ளி மார்பில் போட்டுக் கொண்டு மாறி மாறி நாகேஷ் முத்தம் கொடுக்க, விரலைச் சுட்ட சிகரெட்டைப் போட ஆஷ்—ட்ரேயைத் தேடிய பிரசன்னுவின் பார்வையில் அந்தக் காட்சி பட்டது.

திரும்பிப் பார்த்தால், நாகேஷ் இன்னமும் குழந்தையைக் கொஞ்சிக் கொண்டிருந்தார்.

மறுபடியும் அதைப் பார்த்தான்....

மாறி மாறி இரண்டையும் பார்த்தவுடன், பளிச்சென்று மூளையில் அந்தப் பொறி மின்னியது....

''மிஸ்டர் நாகேஷ், உங்க தோட்டத்துல என்னென்லாம் செடிகள் இருக்கு?''

அந்தக் கேள்வியின் காரணம் புரியாத நாகேஷ், புருவத்தை உயர்த்த, ''விஷ முள்... இது மாதிரி ஏதாவது உண்டா?'' என்ருன்.

''க்ளாமிடோ'ன்னு ஒரு முள் உண்டு. சின்னதா இருக்கும். பயங்கரப் பாய்ஸன். எப்படிக் கேட்கறீங்க?''

''ஒண்ணுமில்லே.... குழந்தையை உங்க மனைவி கிட்டக் குடுங்க.

''பிரசன்னு நீங்க?''

''சொல்றதைக் கேளுங்க. ஒரு ஆபத்தும் வராது. குடுங்க குழந்தையை. குடுத்துட்டு எங்கூட வெளில வாங்க.''

ஆவேசமாக மோகனை வாங்கிக் கொண்டாள்.

''ஐயோ, பிரசன்னு, என்ன இது விஷப் பரீட்சை?''

''ஒண்ணும் ஆகாது. வாங்க!''

அந்தப் பெண் நன்றி சொட்டும் பார்வையோடு பிரசன்னுவைப் பார்க்க, பதிலுக்கு ஒரு சிரிப்பைத் தந்துவிட்டு, நாகேஷோடு வெளியில் வந்தான்.

''அங்க பாருங்க மிஸ்டர் நாகேஷ்!''

மாடி ஏறிப்போகும் திருப்பத்தில் விக்ரம் உட்கார்ந்து, மடியில் ஒரு பொம்மையை இருத்தி அதன் மேல் ஏராளமான 'க்ளாமிடோ' முள்களை செருகிக் கொண்டிருந்தான். கண்களில் ஒரு வெறி பல்பு போல எரிந்தது.

''என்ன பிரசன்னு இது?''

''வெளில வாங்க!''

தெருவைக் கடந்ததும் கேட்டான் பிரசன்னு. ''இந்தப் பெண்ணைக் கல்யாணம் செஞ்சுகிட்ட உடனே என்ன சொன்னீங்க?''

''எதுபத்தி?''

''உங்க விக்ரம் பத்தி?''

''அவன் உன் பிள்ளை. உன்னுல அழக் கூடாது. அவன் தப்புச் செஞ்சாலும் நான் உன்னைத்தான் கண்டிப்பேன். தாயில்லா அந்தப் பிள்ளைக்காகத்தான் உன்னை நான் கொண்டு வந்திருக்கேன். அவனைப் பற்றி ஏதாவது நீ தப்பாப் பேசினு, நம்ம உறவே முறிஞ்சிடும். உன்னை விலக்கி வைக்கவும் நான் தயங்க மாட்டேன்!''

''நினைச்சேன்!''

''ரொம்பச் செல்லமா வளர்ந்த உங்க விக்ரம், மோகன் பிறந்து அவனை நீங்க கொஞ்ச ஆரம்பிச்சப்பக் கூர்ந்து கவனிச்சிருக்கான். அவனுடை சப்—கான்ஷியஸ் வேறே விதமா இயங்க ஆரம்பிச்சிருக்கு. மோகன் தனக்குப் போட்டி.... தகப்பனுடை பாசத்தைப் பங்கு போட்டுக்க வந்த எதிரின்னு பலமா மனத்தில் வன்மத்தை வளர்த்துட்டு வந்திருக்கான். நாளுக்கு நாள் அவனுடை வெறியும் பொறுமையும் அதிகமாகிச்சின்னச்சின்னதாக்குழந்தைக்கு அவன் தொந்தரவு தர ஆரம்பிச்சதை உங்க மனைவி பார்த்திருக்கணும். உங்ககிட்டச் சொல்லவும் வழியில்லே. குழந்தைகஷ்டப்படறதைப்பார்க்கச் சகிக்கலே. அதுதான் எந்த நேரமும் குழந்தையைப் பிரியாம கொஞ்சம் ஹிஸ்டீரிக்கா இருந்திருக்கா. இதே 'க்ளாமிடோ'வை எடுத்து மோகனுடை தொடைல விக்ரம் குத்தியிருக்கான். அதைப் பார்த்த உங்க மனைவி, விஷம் எறங்க விடாம அந்தப் பகுதியைக் கடிச்சு, ரத்தத்தை உறிஞ்சியிருக்கா. அது உங்க பார்வைல வேறே விதமா விழ, பிரச்னை என் வரைக்கும் வந்திருக்கு...''

''தேங்க் யூ பிரசன்னு. ஒரே நேரத்துல ரெண்டு பேரையும் காப்பாத்திட்டீங்க...''



சிட்னி துறைமுகப்பாலம்.

# கிழக்கே ஓர் உலகம்

## 17. ஆஸ்திரேலியாவில் சந்தித்த ஈழத் தமிழர்!

அந்தகர்கள் நடக்கவும், அங்கஹீன முள்ளவர்கள் சக்கர நாற்காலியில் செல்லவும் **Senses walk** என்ற அந்தப் பாதையைப் பிரத்யேகமாக அமைத்திருக்கிறார்கள் என்று அறிந்தேன். 'எத்தனை மனிதாபிமானம் மிக்க செயல் இது!' என்று எனக்கு ஆச்சரியமேற்பட்டது. இயற்கை எழிலையும் பறவை, மிருக இனங்களையும் மகா பக்தி சிரத்தையுடன் பூஜிக்கும் ஆஸ்திரேலியர்களுக்கு இந்த மனிதாபிமான உணர்வு வெகு இயல்பான குணமாக இருக்க வேண்டும். ரயிலிலும் பஸ்களிலும் அங்கஹீனமுற்றோருக்கும் வயதானவர்களுக்கும் சௌகரியமான தனி இடங்கள் இருக்கின்றன. இவற்றை ஆக்கிரமித்துக் கொண்டு விட்டுக் கொடுக்க மாட்டேன் என்று சொல்கிறவர்கள் கிடையாது.

குரிங்கய் காட்டு மலர் வனத்திலும் தடைகளை மீறும் ஆஸ்திரேலியர் ஒருவர் கூட இல்லை. வனத்தினுள்ளே அமைந்திருக்கும் பாதைகளில் வண்டிகள் செல்லக் கூடாது; நாய்கள், குதிரைகள் போகக் கூடாது; பந்து விளையாட்டுக்கு அனுமதியில்லை; பிக்னிக் வருபவர்கள் சில பிரத்தியேக இடங்களையே உபயோகிக்கலாம்; புகை பிடிக்கக் கூடாது; தீமூட்டக் கூடாது; குப்பை போடக் கூடாது...

"ஆஸ்திரேலியர்களுக்குத் தோட்டக் கலையில் அசாத்திய மோகம்" என்றார் ராஜலக்ஷ்மி. "ஞாயிற்றுக் கிழமைகளை அவர்கள் அநேகமாகத் தோட்ட வேலையிலும் புதிய செடிகள் வாங்கி வருவதிலும் கழிப்பார்கள்."

அவர் சொன்னதற்கு ஏற்றாற்போல் அங்கங்கே வழியில் தென்பட்ட நர்ஸரிகளில் ஆஸ்திரேலியர்கள் செடிகளையும், விதைகளையும் எருவையும் வாங்குவதைக் கவனித்தேன்.

நகரின் சந்தடியை வெறுத்துத் திறந்த வெளிகளை ரசிக்கும் ஆஸ்திரேலியர்கள், ஸிட்னி நகரத்துக்குள் வசிப்பதைவிட நகரத்துக்கு வெளியே இருப்பதைத்தான் விரும்புகிறார்கள். காலை எட்டரை மணிக்குள் அலுவலகத்துக்கு நாற்பது மைல் தொலைவிலிருந்து தினமும் ரயிலில் பயணம் செய்து வரும் வாலெஸ் என்னிடம் சொன்னார்:

"என் இடம் ரொம்பச் சின்னது. எண்பது ஏக்கர்தான்! குதிரைச் சவாரியில் என் மனைவிக்கும் மகனுக்கும் ரொம்ப நாட்டம்.

வாஸந்தி

இரண்டு குதிரைகள் வைத்திருக்கிறேன்'' என்றார்.

தம் வீட்டிற்கும் என்னை அழைத்துக் கொண்டுபோய்க் காண்பித்தார். கண்ணுக்கு எட்டிய தூரம் வரை பசுமையான புல்வெளியின் மையத்தில் மிக அழகிய வீடு. இரண்டு ஜாதிக் குதிரைகள் அலட்சியமாக நின்றன. அவருடைய மகனது அறையில் சுவர் முழுவதும் குதிரை சவாரியில் அவன் (15 வயது) ஜெயித்த பதக்கங்கள்; கேடயங்கள்.

''பக்கத்து நிலத்தை யாரோ வாங்கப் போகிறார்கள் என்று கேள்விப்பட்டு என் மனைவி பதறிவிட்டாள். அதனால் இன்னொரு முப்பது ஏக்கரா நான் வாங்க வேண்டியிருந்தது'' என்றார் வாலெஸ் புன்னகையுடன். ''சாதாரணமாக ஆஸ்திரேலியர்களின் வீடும் சுற்றுப்புறமும் நூறு ஏக்க்ராக்களுக்குக் குறையாது'' என்றார்.

**ரா**ஜலக்ஷ்மி அங்கு பள்ளியில் டீச்சராக வேலை பார்க்கிறார். ''இங்கு போதைப் பொருள் பெரிய பிரச்னை ஆகி வருகிறது. அதற்கு என்ன காரணம் என்று நிச்சயமாக எனக்குப் புரியவில்லை'' என்றார். ''அமெரிக்காவைப் போல் இங்கு பிளவுபட்ட குடும்பங்கள் அதிகம் என்று சொல்ல முடியாது. ஆஸ்திரேலியப் பெண்கள் குடும்பப்பாங்கானவர்கள். குழந்தைகளை மிகப் பிரியமாகப் பார்த்துக் கொள்பவர்கள். அவர்களின் முன்னேற்றத்தில் விசேஷ கவனம் செலுத்துகிறவர்கள். அப்படியும் சிறுவர்கள் போதைகளுக்குப் பழகிப் போகிறார்கள். ஒரு ஃபாஷனாக மேற்கைக் காப்பி அடிக்கிறார்களோ என்னமோ! புகை பிடிப்பது போல் சகஜமாகிவிட்டது. அதன் விளைவுகளைப் பற்றி எத்தனையோ பிரசாரம் நடக்கிறது. அப்படியும் கட்டுப்படுத்த முடியவில்லை. இவர்களிடையே ஃப்ரீ செக்ஸ் சின்ன வயசிலேயே ஏற்பட்டு விடுவதும் காரணமாக இருக்கலாம்.''



எண்பது ஏக்கரில் குதிரைச் சவாரி — ஸ்டீவர்ட் வாலஸ் தமது மனைவியின் குதிரையுடன்

''தார்மீக ரீதியில் இல்லாவிட்டாலும் AIDS ஸைப் பற்றின பயத்தினால் ஆஸ்திரேலியர் பழங்காலக் கட்டுப்பாடான வாழ்க்கைக்குத் திரும்பிக் கொண்டிருக்கிறார்கள் என்று நேற்று ஒரு பத்திரிகையில் படித்தேனே?''

''ஒருவேளை வயதானவர்கள் ஒழுக்கத்தின் அவசியத்தை உணர ஆரம்பித்திருக்கலாம்; இருபது வயதுக்குள் இருப்பவர்களுக்கு இந்தப் பிரச்னை இருக்கும் என்று சொல்ல முடியாது.''

**அ**ன்று மாலை ஸிட்னி தமிழ் சங்கத்தில் என்னைப் பேசச் சொல்லியிருந்தார்கள். ஒரு பள்ளியில் நடந்த அந்தக் கூட்டத்திற்கு நிறையத் தமிழர்கள் ஆர்வத்துடன் வந்திருந்தார்கள். ஒவ்வொரு ஞாயிறன்றும் டாக்டர் முத்துக் கிருஷ்ணன் தம்பதி தமிழ்க் குழந்தைகளுக்குத் தமிழ் கற்றுக் கொடுக்கிறார்கள்.



ஆஸ்திரேலிய இலக்கிய வாரியத்தின் தலைமைத் திட்ட அதிகாரி மிஸ் எலேன் விண்ட்ஸேயுடன்

ஆங்கிலச் சூழலிலேயே வளரும் குழந்தைகள் சுலபமாகப் புரிந்து கொள்ளும் வகையில் சிரத்தையுடன் 'சார்ட்' தயாரித்துச் சொல்லித் தருவது விசேஷம். ''தமிழ்க் கல்விக்காக ஆஸ்திரேலிய அரசு நிதி உதவ முன் வந்திருக்கிறது. ஆனால் குழந்தைகளுக்குத்தான் அவ்வளவு ஆர்வம் இல்லை'' என்றார் முத்துக் கிருஷ்ணன். ''இந்தப் பணியில் எங்களுக்குக் கிடைக்கும் ஒத்துழைப்பும் குறைவு'' என்றார் திருமதி முத்துக் கிருஷ்ணன்.

**வி**னாடி பிசகாமல் மறுநாள் காலை காமன்வெல்த் காருடன் டிரைவர் வந்துவிட்டார். நான் போக வேண்டிய இடங்களிலெல்லாம் என்னை இறக்கி விடும்போது டிரைவர் சொல்வார்: ''இங்கே பார்க் பண்ண முடியாது. எத்தனை மணிக்கு நான் வர வேண்டும் என்று சொல்லுங்கள், வருகிறேன்.'' நான் சொன்ன நேரத்துக்கு வினாடி பிசகாமல் வந்து நிற்பார். தினமும் வேறு வேறு டிரைவர்கள். ஆனால் எல்லாரிடமும் இதே ஒழுக்கம் இருந்தது. ஒவ்வொரு காரும் ஒரு கப்பல்! சிலவற்றில் டீ.வி, ரேடியோ, டெலிபோன் எல்லாம் இருந்தன! ஒரு காரில் ஸோபா ஸெட் கூட இருந்தது!

ஆஸ்திரேலிய இலக்கிய வாரியத்தின் தலைமைத் திட்ட அதிகாரி மிஸ் எலேன் விண்ட்ஸேயுடன் ஒரு சந்திப்பு இருந்தது. ஆஸ்திரேலிய அரசு எழுத்தாளர்களுக்குத் தரும் சலுகைகளையும் பண உதவிகளையும் அவர் விவரித்தபோது தலை சுற்றியது! இதைப் படிக்கும் எந்த இந்திய எழுத்தாளருக்கும் ஓர் ஏக்கப் பெருமூச்சு எழத்தான் செய்யும். 4000 டாலரிலிருந்து 8000 டாலர் (1 ஆ.

# நீங்கள் புதிய பெஸ்டோ உபயோகித்திருக்கிறீர்களா?

1. புதிய ஃபார்முலா கொண்ட பெஸ்டோ. ஒவ்வொரு சலவைக்குப் பின்னும் அதிக வெண்மை, அதிக பகட்டு. வியப்பூட்டும் டிடர்ஜெண்ட் பவுடர் பெஸ்டோ எல்லா வகைத் துணிகளுக்கும் உகந்தது.

2. புதிய ஃபார்முலா கொண்ட பெஸ்டோ. இதில் துணிகளுக்கு தீங்கு விளைவிக்கும் சோடா லவலேசம் இல்லை. ஆகவேதான் சாதாரண வாஷிங் பவுடர்களைப் போல் இது தண்ணீரில் வழவழ என்று இருப்பதில்லை. மேலும், துணிகளை அலசுவதும் மிகவும் சுலபமாகிறது.

மூன்று நிகரற்ற தனிச் சிறப்புகள்! விலையோ மிகக் குறைவு!

ரூ. 7.65





3. புதிய ஃபார்முலா கொண்ட பெஸ்டோ. ஆல்ஃபாஒலெஃபின் கொண்ட ஒரே ஒரு டிடர்ஜெண்ட் பவுடர். இது உங்கள் கைகளை மென்மையாக வைத்திடும். இன்னும் ஒரு விஷயம், உங்கள் வாஷிங் மெஷினுக்கும் பெஸ்டோ ஈடு இணையற்றது! பெஸ்டோ- உங்கள் துணிகள், கைகள் மற்றும் பணத்திற்கு உறுதுணை.




**மணங்கவர்ந்த விலையில் உளம் கவர்ந்த வெண்மை, கைகளுக்கு மென்மை.**

கோத்ரெஜ் தயாரிப்பு

CHAITRA-B-G-391 TAM

டாலர் = 8 ரூ) வரை மொத்தமாகவோ அல்லது வருஷத்துக்கு 25 00 டாலர் என்ற கணக்கிலோ அவரவர் தகுதிக்கேற்ப எழுத்தாளர்களுக்கு நிதி உதவி அளிக்கப்படுகிறது. இதைத் தவிர பிரயாணத்துக்கும் புத்தகங்கள் பதிப்பிக்கவும் எத்தனையோ சலுகைகள்!

ஆஸ்திரேலிய 200 வது வருஷக் கொண்டாட்டம் 1988 ல் நடக்கவிருக்கிறது. அதற்கான தயாரிப்பில் இப்பொழுது அத்தேசம் மும்முரமாக ஈடுபட்டிருக்கிறது. இதற்கென்று ஏற்பட்டுள்ள அமைப்பின் தகவல் பிரிவுக்கு ஜெனரல் மானேஜரான மிஸ் வெண்டி மக்கார்தியுடன் அவரது அலுவலகத்தில் சந்திப்பு ஏற்பாடாகியிருந்தது. அவர் ஆஸ்திரேலிய வானொலியின் துணைத் தலைவரும் கூட. தலைவர் பதவி காலியாக இருந்தது.

"ஸீனியாரிடி பிரகாரம் தலைமைப் பதவி உங்களுக்குக் கிடைக்க வேண்டும் என்றும் ஆனால் இங்கு பெண்களுக்கு அப்படிப்பட்ட உயர் பதவி கிடைக்காது என்றும் கேள்விப்பட்டேன். உண்மையா?" என்று நான் மிஸ் மக்கார்தியிடம் கேட்டேன்.

"வாஸ்தவம்தான்" என்று மிஸ் மக்கார்தி மெலிதாகச் சிரித்தார்.

மிஸ் மக்கார்தி படித்துப் பெற்றுள்ள பட்டங்கள் இரண்டு வரிகள் ஓடும். பாக்கித் திறமைகள், வகித்த பதவிகள் அநேகம். வயது 44. இவருக்கு வாய்ப்பு கிடைக்காமல் போவது எத்தனை அநியாயம் என்று எனக்குத் தோன்றியது.

"இது அநீதியில்லையா? இதற்கு நீங்கள் எதிர்ப்புக் காண்பிக்க வேண்டாமா?" என்றேன்.

"காண்பித்துப் பயனில்லை. பெண் என்கிற காரணத்தினால் ஒதுக்கியது போல நடந்து கொள்ளமாட்டார்கள். சட்டவிரோதமாகச் செய்தது போலும் இருக்காது. ரொம்ப சாமர்த்தியமாக இந்த ஓரம் கட்டுதல் நடக்கிறது. இது ஒரு மரபாகவே போய்விட்டது. என்ன செய்ய முடியும்?"

முதல் ஆங்கிலேயக் கப்பல் ஆஸ்திரேலியாவுக்கு 1788 ம் ஆண்டு வந்து சேர்ந்தது. 200—வது வருஷக் கொண்டாட்டம் அந்த அடிப்படையில்தான் நடக்கப் போகிறது.

இந்தக் கொண்டாட்டமே அநாவசியம் என்கிற எண்ணம் அங்கு பரவலாக இருக்கிறது. முக்கியமாகப் பழங்குடி வகுப்பினருக்குத் தங்களையும் தங்கள் கலாசாரத்தையும் நாசம் செய்த ஆங்கிலேயர்களின் வருகையைக் கொண்டாடுவதும் அந்தக் கொண்டாட்டத்தில் தங்களுடைய ஒத்துழைப்பையும் அரசு எதிர்பார்ப்பதும் கட்டோடு பிடிக்கவில்லை. ஆனால் அரசோ, ஆங்கிலேயரின் வருகையை நினைவூட்டி மகிழும் கொண்டாட்டம் இல்லை இது; இரு நூறு வருஷங்களில் ஆஸ்திரேலியா அடைந்திருக்கும் முன்னேற்றத்தை எண்ணி மகிழும் கொண்டாட்டம் என்று வாதிடுகிறது.



ஒருவர்: அந்தப் பாடகர் ஏன் சரிகம இளநி' என்று பாடுகிறார்?

மற்றவர்: அவருக்கு 'பதநி'யை விட 'இளநி' தான் ரொம்பவும் பிடிக்குமாம்; அதான்!

— என். ஜி. நடராஜன்.

ஆஸ்திரேலியாவில் இலங்கைத்தமிழர்கள் பலர் அடைக்கலம் புகுந்திருக்கிறார்கள். நான் தங்கியிருந்த பகுதியில் நிறையப் பேர் இருப்பதை நான் கால்நடையாக இங்குமங்கும் போய் வந்தபோது கவனித்திருந்தேன். ஓர் இடத்தில் ஒரு பெண்மணியிடம், "நீங்கள் தமிழ்நாட்டைச் சேர்ந்தவரா?" என்று நான் பேச்சுக் கொடுத்ததும், "இல்லை ஸ்ரீலங்கா" என்றார். "நல்லவேளை, இங்கே பாதுகாப்பாக இருக்கிறீர்கள்!" என்றதற்கு, பொலபொலவென்று அவர் கண்களிலிருந்து நீர் பெருகிவிட்டது.

"பாதுகாப்பு மட்டும் போதுமா? நிம்மதி வேண்டாமா? சொந்த மண்ணை விட்டுக் கட்டாயமாக வெளியேற வேண்டிய நிலையில் நிம்மதி எங்கே? குழந்தைகள் எல்லாம் உலகத்தின் வெவ்வேறு மூலைகளில் பதுங்கியிருக்கிறார்கள்!" என்றார்.

ஸிட்னி ஈழத் தமிழர் சங்க அங்கத்தினர்கள் என்னுடன் தொடர்பு கொண்டு ஒரு நாள் இரவு 7.30 மணிக்குத் தங்கள் இடத்திற்கு என்னை அழைத்துச் சென்றார்கள். பத்து பன்னிரண்டு இளைஞர்கள், யுவதிகள் (எல்லாருக்கும் வயது முப்பதுக்குள்தான் இருக்கும்) இருந்தார்கள். ஒவ்வொருவரும் தாங்கள் இலங்கையை விட்டு வெளியேறிய கதையையும் அங்கு அவர்களுடைய சுற்றத்தார் படும் அவதிகளையும், அங்கு நடக்கும் கொடூரங்களையும் விவரித்தபோது நாடி நரம்பெல்லாம் பதைத்துப் போயிற்று.

"ஆஸ்திரேலியப் பிரதம மந்திரியும் எங்கள் நிலையை உணர்ந்து வெளிப்படையாகக் கவலை தெரிவித்திருக்கிறார். ஆனால் எங்களுக்கு உதவக் கூடிய நாடு இந்தியா தான் என்று அவரும் சொல்கிறார். இந்தியர்களின் சந்ததிகள்தான் இன்றைய இலங்கைத் தமிழர்கள் என்கிற காரணத்தால் இந்தியா முனைப்புடன் செயல்பட்டால்தான் எங்களுக்கு மறுவாழ்வு கிடைக்க வாய்ப்புண்டு" என்றனர்.

அவர்களுடைய கவலையும் துயரமும் என்னுள் ஆழமான விசனத்தை எழுப்பிற்று. வீடு திரும்பியதும் அறைக்குச் சென்று பேசாமல் படுத்துக் கொண்டேன். அன்றிரவு தூக்கமே வரவில்லை.

(தொடரும்)

# "எனக்குக் காரியங்கள்தான் முக்கியம்; விளம்பரங்கள் அல்

## —தஞ்சை கலெக்டர் கூறுகிறார்

**மா**வட்டச் சுற்றுப் பயணம் முடிந்ததும் நமது பிரதிநிதிகள் உங்களை வந்து சந்திப்பார்கள்; அப்போது உங்களோடு, மற்ற முக்கியமான ஆபீஸர்களும் உடனிருந்தால் மிகவும் வசதியாக இருக்கும் என்று தஞ்சை மாவட்ட கலெக்டர் டி.ஆர். இராமசாமிக்கு நாம் எழுதியிருந்ததற்கிணங்க, அவரோடு மாவட்ட வருவாய் அலுவலர், மாவட்ட வழங்கல் அதிகாரி, மாவட்ட ஆட்சித் தலைவரின் நேர்முக உதவியாளர் (பொது), மாவட்ட ஆதி திராவிடர் நல அலுவலர், மாவட்ட பிற்பட்டோர் நலத்துறை அலுவலர், மாவட்ட ஆட்சித் தலைவரின் நேர்முக உதவியாளர் (பஞ்சாயத்து வளர்ச்சி) மாவட்ட ஊரக வளர்ச்சி முகமை திட்ட அலுவலர், மாவட்ட கூட்டுறவு பால் உற்பத்தியாளர்—ஒன்றிய மேலாண்மை இயக்குனர், மாவட்ட ஆட்சித் தலைவரின் நேர்முக உதவியாளர் (கணக்கு), மாவட்ட ஆட்சித் தலைவரின் கூடுதல் நேர்முக உதவியாளர் மற்றும் பொதுப் பணித் துறை, நகராட்சி அலுவலர்கள் மேலும் செய்தித் துறை அதிகாரிகள் ஆகியோரெல்லாம் உடனிருந்தார்கள். கூடவே மின்சார வெட்டும் இருந்தது. அந்தப் புழுக்கத்திலேயே பேட்டியும் ஆரம்பமானது....

*கல்கி:* வேறு எந்த மாவட்டத்தை விடவும் தஞ்சை மாவட்டத்து ரோடுகளெல்லாம் படு மோசம். இதற்கு என்ன காரணம்?

*கலெக்டர் டி. ஆர். இராமசாமி:* மண்வாகு அப்படி. கூடவே புயல் மழையால் ஏற்படும் சேதங்கள்.... இவற்றோடு சமதளத்தைவிட அறுபது செ.மீட்டர் உயரத்தில் ரோடுகள் இருக்க வேண்டும். இங்கு அப்படி இல்லை. இவைதான் காரணம்.

*கல்கி:* சாலைப் பராமரிப்பே இல்லை என்றுதான் தோன்றுகிறது......

*கலெக்டர்:* இல்லையில்லை; பராமரித்துக் கொண்டுதான் இருக்கிறோம். புயல்—மழையை என்ன செய்ய முடியும்?

*கல்கி:* தஞ்சையிலுள்ள பல கிராமங்களுக்குச் சாலை வசதி இல்லை. அதனால் பஸ் வசதி இல்லை. இவற்றால் அங்குள்ள குழந்தைகள் படிக்கச் செல்லமுடிவதில்லை. உதாரணத்திற்குத் திருராமேஸ்வரம், இளந்துறை.... என்று பல நூறு கிராமங்களைச் சொல்லிக் கொண்டே போகலாம்.... இவற்றோடு தேதியூர்—பாகசாலை என்னுமிடத்தில் திருமலைராஜன் ஆற்றில் ஒரு பாலம் இல்லாததால் எட்டுக் கிராம மக்களுக்கு மேல் போக்குவரத்து இல்லாமல் தவிக்கிறார்கள். மேலும் பாமினி ஆற்றிலும், திருவாரூரிலும் கட்டப்பட்ட பாலங்களும் போக்குவரத்துக்குத் திறக்கப்படவில்லை.... ஏன் இப்படி?

*கலெக்டர்:* தஞ்சாவூரில் எடுத்துக்கொண்டால் இன்னும் ஐம்பது அல்லது அறுபது பாலங்கள் தேவை. அவற்றையெல்லாம் உலக வங்கியின் உதவியுடன் விரைவில் கட்டிவிட முடியுமென்று நம்புகிறோம். நிதி வசதிக்கேற்பச் சாலை வசதிகளும் செய்யப்படும். ஏதோ ஒன்றிரண்டு இடத்தில் இருக்கும் திறக்கப்படாத பாலங்களும் விரைவில் திறக்கப்பட்டுவிடும்.

*கல்கி:* திருநெல்லிக்காவல் அருகிலுள்ள ஆதிவிடங்கம் என்ற ஹரிஜனக் கிராமத்தில் சுமார் நூற்றைம்பது குடும்பங்கள் இருந்தும் அங்கு ஒரேயொரு அடிகுழாய்தான் இருக்கிறது. அதிலும் சுத்தமான தண்ணீர் இல்லை. அதுவும் கடுமையான கோடையில் வற்றிவிடும்; அப்போது ஐந்து கி.மீட்டர் நடந்து சென்றுதான் குடிநீர் கொண்டு வர வேண்டும் என்னும் அவல நிலை. சாலை வசதியும் அவர்களுக்கு அறவே கிடையாது. அங்குள்ள குழந்தைகளுக்கு ஒரு பால்வாடிகூட இல்லை...

*கலெக்டர்:* அந்தக் கிராமம் பற்றி இதுவரை என் கவனத்திற்கே கொண்டு வரப்படவில்லை.

*கல்கி:* இப்போது கொண்டு வந்துவிட்டோமே!

*கலெக்டர்:* என்ன செய்ய முடியுமென்று பார்க்கிறேன்.

*கல்கி:* கொள்ளிடம் நதிக்கரையிலுள்ள அளக்குடி என்னும் கிராமத்தில் கொள்ளிடம் வளைந்து செல்கிறது. அதனால் ஒவ்வொரு வெள்ளத்தின் போதும் மண் அரிப்பு ஏற்பட்டுக் கொண்டே இருக்கிறது. அதைத் தடுக்க 67 லட்சம் செலவில் காண்ட்ராக்ட் விடப்பட்டும் வேலைகள் முடிவடையவில்லை. பாதியிலேயே விட்டுவிட்டார்கள். அதனால் தப்பித் தவறி அந்தக் கரை உடைபட்டால் அருகிலிருக்கும் பத்து கிராமங்களிலுள்ள [illegible]யிரம் மக்களும் ஆற்றோடு போக



வேண்டியதுதான். அதோடு அருகிலுள்ள ரோடு, ரயில் பாலங்களும் பாதிக்கும். இத்தனை அபாயத்திலும் வேலை பாதியில் கிடப்பதற்கு என்ன காரணம்?

கலெக்டர்: அது பற்றி எனக்கு ஒன்றும் தெரியாது.

கல்கி: தஞ்சை மாவட்டத்தில் பாதுகாக்கப்பட்ட குடிநீர் வசதியே இல்லை. அதற்காகக் கட்டப்பட்ட மேல்நிலை நீர்த் தொட்டிகளெல்லாம் ஆண்டாண்டு காலமாகத் திறக்கப்படாமல் அப்படியே கிடக்கின்றன. இதற்கும் திருக்கடையூர், திருநெல்லிக்காவல், அளக்குடி.... என்று ஏராளமான உதாரணங்களைச் சொல்லலாம்...

கலெக்டர்: அப்படியெல்லாம் ஒன்றுமில்லையே....

கல்கி: நாங்களே நேரில் பார்த்துவிட்டு வந்துதான் சொல்கிறோம்.

கலெக்டர்: ஏதோ ஒன்றிரண்டு இடங்களின் பழுதாகியிருக்கலாம். அவ்வளவுதான்!

கல்கி: அதேபோல்தான் தாய்—சேய் நல விடுதிகளும்! திருராமேஸ்வரத்தில் கட்டப்பட்டு பல ஆண்டுகளாகியும் திறக்கப்படவில்லை. தேவங்குடியிலும் ஒன்பதாண்டுகளாகத் திறக்கப்படவில்லை. நீடாமங்கலத்தில் ஒரு பெண் டாக்டர் மாற்றலாகிச் சென்று ஆறுமாதங்களாகியும் வேறு டாக்டர் போடப்படவில்லை....

கலெக்டர்: இதையும் என்னால் ஒப்புக்கொள்ள முடியவில்லை.

கல்கி: நாங்கள் ஒன்றும் பொய் சொல்ல வேண்டிய அவசியமில்லை....

கலெக்டர்: எங்காவது ஒன்றிரண்டு இருக்கலாம். அவையும் விரைவில் சரியாகிவிடும்.

கல்கி: பூம்புகார் கலைக்கூடத்திலுள்ள உணவு விடுதி திறக்கப்படவில்லை. அதனால் சுற்றுலாப் பயணிகளுக்குப் பெரும் அவதி. அதோடு, சிலம்பு வடிவில் கட்டப்பட்டிருக்கும் ஓய்வு விடுதி இப்போது ஒரு திறந்த வெளிக் கழிப்பிடமாகத்தான் இருக்கிறது. கடற்கரையோரத்திலுள்ள தமிழ்த் தாய் சிலையின் முகம் உடைந்து போய் நிற்கிறது. காரணம், தி.மு.க. ஆட்சியால் கட்டப்பட்டதென்பதால்தான் அ.தி.மு.க. அரசு சரியாகப் பராமரிக்கவில்லை என்று சொல்கிறார்களே, உண்மையா?

கலெக்டர்: அது முழுக்க முழுக்கப் பொய். உணவு விடுதியைத் திறக்கக் கோரி சுற்றுலாத் துறையினருக்கு உடனே எழுதுகிறோம். தமிழ்த் தாய் சிலையையும் சரிப்படுத்தச் சொல்கிறோம். மேலும் நல்லபடியாகப் பராமரிக்கச் செய்கிறோம்.

கல்கி: அதேபோல்தான் தரங்கம்பாடி கோட்டையும். முதன்முதலில் இந்தியாவில் அச்சுக்கூடம் ஏற்படுத்தப்பட்ட இடம் என்ற பெருமை மிக்க அந்த ஊர்க் கோட்டை சரிவரப் பராமரிக்கப்படாததால் பாழடைந்து கொண்டு வருகிறது. அங்குள்ள குலோத்துங்கன் காலத்து மாசிலாமணி கோயிலும், அதன் பராமரிப்புக்காக ஆறு லட்சம் ஒதுக்கப்பட்டும் பாழடைந்து கொண்டு வருகிறது.

கலெக்டர்: கோட்டை தொல்பொருள் இலாகாவினரால்தான் பராமரிக்கப்பட வேண்டும். மாசிலாமணி கோயிலைப் பொறுத்தவரை நிதி ஒதுக்கியிருந்தால் விரைவில் அதற்கான வேலைகளைத் தொ ங்கி விடுவார்கள்.

° அணைக்குடியில் இன்னும் திறக்கப்படாமல் இருக்கும் தண்ணீர் டேங்க்....



கல்கி: இதே மாதிரிதான் கோயில்களின் நிலையும். சீர்காழியிலுள்ள ராகு—கேது சன்னிதானங்கள் அமையப் பெற்ற நாகேசுவரன் கோயில், மங்கை மடத்திலுள்ள ஸ்ரீ வீர நரசிம்ம பெருமாள் கோயில், கேக்கரையிலுள்ள ஸ்ரீராமசாமி பெருமாள் கோயில், ஸ்ரீவிஸ்வநாத ஸ்வாமி கோயில் என்று மாவட்டம் முழுவதும் நூற்றுக் கணக்கான புராதனக் கோயில்களெல்லாம் சீரழிந்து கொண்டு வருகின்றன. இத்தனைக்கும் எல்லாக் கோயில்களுக்கும் ஏராளமான நிலங்கள் இருக்கின்றன...

கலெக்டர்: குத்தகைதாரர்கள் சரிவரக் குத்தகை செலுத்தாததுதான் இவற்றுக்கெல்லாம் கர்ரணம். எங்களால் முடிந்தவரை அதையும் வசூலித்துக் கொண்டுதான் வருகிறோம்.

கல்கி: திருபுவனம் பட்டு பிரசித்தி பெற்றது. தினசரி சராசரியாக அந்த ஊருக்குப் பட்டு வாங்குவதற்காகவே சுமார் ஐநூறு பேர் வந்து போகிறார்கள். அப்படியிருந்தும் அந்த ஊரில் ஒரு பொதுக் கழிப்பிட வசதி கூட இல்லையே?

கலெக்டர்: பட்டு வாங்கும் கடைகளிலேயே கழிப்பிட வசதிகள் இருக்குமே!

கல்கி: தஞ்சை மாவட்டத்தின் மிக முக்கியப் பிரச்னை காவிரி நீர்ப் பிரச்னை. இந்நிலையில் தஞ்சையில் பாசன நீரை வீணாக்காமல் பயன்படுத்துவதாகத் தெரியவில்லை. காரணம் கால்வாய்களெல்லாம் தூர் வாரப் படாமல் தூர்ந்து கிடப்பதை நேரில் பார்த்தோம். இவற்றோடு கால்வாய்களில் தனியார் ஆக்ரமிப்புகளும் நிறைய இருக்கின்றன....

கலெக்டர்: தண்ணீரை வீணாக்குவதாகக் கூறும் குற்றச்சாட்டை ஒப்புக்கொள்ள முடியாது. தஞ்சையிலுள்ள 29,000 மைல் நீளமுள்ள அத்தனை வாய்க்கால்களையும் அரசே சுத்தப்படுத்திவிட முடியாது. 'ஏ' பிரிவு வாய்க்கால்களை மட்டும்தான் பொதுப் பணித்துறை சுத்தப்படுத்தும். கடந்த ஆண்டு கூட இருபத்தொன்பது புல்டோசர்களைக் கொண்டு சுத்தப்படுத்தினோம்; ஆக்ரமிப்பு கூட அகற்றினோம். மற்ற வாய்க்கால்களைக் [illegible]தான் மராமத்துச் செய்து கொள்ள வேண்டும்.

கல்கி: கும்பகோணத்திற்கு அருகிலுள்ள காவல்கூடம், நீர்த்தநல்லூர், மேலாத்துக்குறிச்சி ஆகிய ஊர்களுக்காக திருவைகாவூரில் மண்ணியாற்றிலிருந்து பிரிந்து வரும் 'ஏ' பிரிவு வாய்க்கால் மணல் மூடித் தூர்ந்து கிடப்பதை நேரில் பார்த்தோம். கடந்த பதினைந்து ஆண்டுகளாக இப்படித்தான் கிடக்கிறதாம். சென்ற ஆண்டு பழமலை என்ற சப்—கலெக்டரே அவ்வாய்க்காலைப் பார்வையிட்டு ஒரு புல்டோசரை அனுப்பி வைத்தாராம். ஆனால் அதில் ஆக்ரமிப்புகள் செய்துள்ள பெரும் மிராசுதார்கள் புல்டோசர் வாய்க்காலில் நுழையாதபடி தடுத்துவிட்டார்களாமே!

கலெக்டர்: இது என் கவனத்திற்கு வரவில்லை. நான் என்ன செய்ய முடியும்?

கல்கி: இதேபோல் வெட்டாற்றிலிருந்து பிரியும் ஒட்டக்குடி வாய்க்காலும் தூர்ந்துதான் கிடக்கிறது. சரி வரத் தண்ணீரும் பகிர்ந்துவிடப் படுவதில்லை என்கிறார்கள். அதனால் ஒட்டக்குடி பகுதியிலுள்ள 1650 ஏக்கர் நிலம் பாதிப்புக்குள்ளாகியிருக்கிறது. எனவே, வெட்டாறு, ஓடம்போக்கியாகப் பிரியும் இடத்தில் ஒட்டக்குடி வாய்க்காலை இணைத்துவிட்டால் பிரச்னை ஏதும் இருக்காது என்று அவ்வூர் மக்கள் சொல்கிறார்கள். ஏன் அப்படிச் செய்யக் கூடாது?

கலெக்டர்: அனைவருக்கும் தண்ணீர் சமமாகத்தான் பகிர்ந்துவிடப் படுகிறது. அவர்கள் கூறுவதில் நியாயமே இல்லை. இப்படியிருக்கும்போது அந்த வாய்க்காலை வேறு இடத்தில் கொண்டு போய் இணைக்க வேண்டிய அவசியம் என்ன?

கல்கி: வேதாரண்யம்தாலுகாவில்முள்ளியாறு,உப்பனாறு ஆகியவற்றுக்கிடையிலுள்ள நீர் நிலைகளில் மழை நீரைத் தேக்குவதன் மூலம், முப்பத்தேழு ஊராட்சி ஒன்றியங்களிலுள்ள சுமார் ஐம்பதாயிரம் ஏக்கர் நிலம் பாசனம் பெறும் என்றும், சரியான வடிகால்களை அமைப்பதன் மூலம் வெள்ளச் சேதத்தையும் தடுக்க முடியும் என்றும் அப்பகுதி மக்கள் சொல்கிறார்களே....

கலெக்டர்: வெறும் கண்ணால் பார்க்கும்போது எல்லாம் அற்புதமாய்த்தான் இருக்கும். செயல்படுத்தும்போதுதான் அத்திட்டங்களிலுள்ள பிரச்னைகள் புரியும். சாதாரண மக்களுக்கு என்ன புரியும்?

கல்கி: இயற்கையாகக்கிடைக்கும்மழை நீரையும் தேக்கி வைத்துக் கொள்ளாமல் தஞ்சை மாவட்டம் வீணடிக்கிறது என்பதற்கு உதாரணம் கள்ளப்பெரம்பூர், வடுவூர் போன்ற ஊர்களிலுள்ள ஏரிகள். ஏரிகள் தூர்வாரப்படாததாலும், ஏரிக்குள் காடாய் மண்டிக் கிடக்கும் சீவு என்றஒருவகைப்புற்களாலும் தேங்கும் நீரின் கொள்ளளவு குறைகிறதல்லவா.... ஏன் அவற்றைஎல்லாம் சுத்தப்படுத்தி தூர் வாரக் கூடாது?

கலெக்டர்: சீவுப் புற்கள் இருப்பதால் ஏரிக்குப் பலமே தவிர. அதனால் தேங்கும்

GOVERNMENT APPROVED PLOTS FROM

## MURALI'S ESTATS

WILL BE

LIKE CASH CERTIFICATES - CAN BE ENCASHED WITH BUY-BACK FACILITY. THIS MEANS MURALI'S ESTATS CAN MEET YOUR URGENT NEEDS BY PAYING YOUR MONEY BACK WITH ATTRACTIVE INTEREST FROM THE DATE OF PURCHASE OF THE PLOT AT PURCHASE COST.

DREAMS ARE NOT SOLD THEY ARE MADE!
*your dreams get shaped at our end.*

## "MURALI EXTENDS TO YOU GODDESS BOOMI DEVI'S BLESSINGS

A BOON TO YOUR FAMILY'S PROSPEROUS FUTURE"

"Doubling of Railway Track upto Chengalpattu will materialise by the end of 1986"
— News in the Hindu of 4.12.85

DAILY TRAIN SERVICES TO MADRAS BEACH
BUS SERVICE EVERY 5mts TO MADRAS -(PARRYS)

## FIRST TIME IN INDIA!

MURALI INTRODUCES A NOVEL SCHEME BUY BACK FACILITY WITH ATTRACTIVE INTEREST FOR YOUR PLOTS.

Flats, properties, Plots in Madras City in hundreds of locations.

**A RARE OPPORTUNITY TO OWN YOUR HOUSE PLOT WITHIN MADRAS METROPOLITAN LIMITS IN EASY INSTALMENTS**

M.M.D.A. APPROVED LAYOUT NO PPD 49/83 LO

DTP No. CRDT CPM 83/189 LB 144

**THIS SCHEME HAS BEEN INTRODUCED AS A TOKEN OF SERVICE AND LOVE AS PER THE WISHES OF HINDU SAGES FOR THE CAUSE OF COMMON PEOPLE.**

# SUNDAR NAGAR

WITHIN MADRAS METROPOLITAN CITY LIMIT



12 MINUTES WALK FROM VANDALUR RAILWAY STATION & BUS ROUTE NOS:
55, 55G, 55H, 55M, 55N, 18A, 18N, 79, 79A, 110

PRICE OF 1800 Sq. Ft.

| | | |
|---|---|---|
| Rs. 9000 | 12 MONTHS | Rs. 900 |
| Rs. 9000 | 25 MONTHS | Rs. 520 |
| Rs. 9000 | 36 MONTHS | Rs. 400 |
| Rs. 5000 | 12 MONTHS | Rs. 1300 |
| Rs. 5000 | 24 MONTHS | Rs. 760 |
| Rs. 5000 | 36 MONTHS | Rs. 580 |

# SRI LAKSHMINARAYANA NAGAR

14 MINUTES WALK FROM SINGAPERUMAL KOIL OPPOSITE TO MARAI MALAI NAGAR SATELLITE TOWNSHIP SITUATED ON BUS ROUTE-TRUNK ROAD.

EASY INSTALMENT SCHEME

PRICE OF 1800 Sq. Ft.

| Scheme 1 | Scheme 2 | Scheme 3 |
|---|---|---|
| 18.5.86 - Rs. 100/- | 18.5.86 - Rs. 100/- | 18.5.86 - Rs. 100/- |
| 21.5.86 - Rs. 1300/- | 21.5.86 - Rs. 400/- | 21.5.86 - Rs. 900/- |
| 24 MON Rs. 150/- | 34 MON Rs. 150/- | 18 MON Rs. 200/- |

SUBSTANTIAL REBATE ON IMMEDIATE FULL PAYMENT

**INSPECTION ON SUNDAY 1.31 P.M. FROM OUR OFFICE PREMISES**
Pay Rs. 10/- & Reserve your Bus Seat for Inspection in Advance

**Pay Rs. 250/- at spot — Ensure immediate plot Reservation**

IT IS EXACTLY 14mts walk from G.S.T. Road and Railway Station

VERY NEAR
COLLEGE, BAZAAR, CINEMA THEATRE, POLICE STATION, ENGINEERING COLLEGE, POLYTECHNIC and ZOO

SWEET PERENNIAL DRINKING WATER AT 8 FEET DEPTH EVEN ON HARD SUMMER

EVEN ON DOWN POUR RAINS — NO WATER STAGNATION

A PANORAMIC VIEW WHICH YOU WILL LOVE AT FIRST SIGHT



# MURALI'S ESTATS

12, RAMASAMY STREET — T. NAGAR
(OPPOSITE TO THANGA MALIGAI)
MADRAS - 600017



Blackbelt

# Blackbelt
## BRIEFS & BANIANS

For strong ones
who wish to remain in style and comfort.

BRIEFS



Sultan
BANIANS



BOXER
TRUNKS



FIANCEE
COMFORT BRIEFS



SAHEB
BANIANS



MARSHALL
BRIEFS



Quality Products of Aristocrat Hosiery Pvt. Ltd.
Post Box No. 3359, Bombay-400 003. Tel: 321861 • 330251

நீரின் கொள்ளளவு குறையாது.

கல்கி: கள்ளப் பெரம்பூர் ஏரிக்குச் சென்று பாருங்கள். அந்தப் புற்கள் காடாய் மண்டிக் கிடக்கிறது. அதனால் நிச்சயம் நீரின் கொள்ளளவு குறையத்தான் செய்யும். தண்ணீருக்குள் எந்தவொரு சிறு பொருளைப் போட்டாலும் அதன் கொள்ளளவுள்ள நீர் வெளியேறித்தான் தீரும். இதுதானே பௌதிகம்....

கலெக்டர் (கூடவே பொதுப் பணித்துறை அலுவலர்கள்): இடையவே கிடையாது. அந்தச் சிவப் புற்களால் ஏரியில் தேங்கும் நீரின் கொள்ளளவு குறையாது.

(இப்படி அவர்கள் அனைவரும் அடித்துச் சொல்லவே நாங்கள் வீண் விவாதம் வேண்டாம் என்று வேறு கேள்விக்கு வந்துவிட்டோம்! அவர்கள் கூற்றை ஒப்புக் கொண்டதால் அல்ல.)

கல்கி: பாலையூரில் வடிகால் பிரச்னை தான் பெரிய பிரச்னை. சுமார் பதினைந்தாண்டுகளுக்கு முன் கோரையாற்றின் குறுக்கே ஒரு மதகு கட்டியும் அதற்கான இரண்டு பலகைகள் போடப்படாததால் மழை வெள்ளம் தேங்கி விடுகிறதாம். சந்திர மோகன் என்ற தனிநபர் ஒருவர் போட்ட பலகைகளும் வெள்ளத்தில் அடித்துச் செல்லப்பட்டுவிட்டதாம். இதைக் கூடவா பொதுப் பணித்துறையால் செய்ய முடியாது?

கலெக்டர்: அங்குள்ள பொதுமக்களே கூட ஒன்று சேர்ந்து பலகை வாங்கிப் போட்டுக் கொள்ளலாம். இதற்கெல்லாம் புகார் செய்ய வேண்டியதில்லை. இருந்தாலும் போடச் சொல்லுகிறேன்.

கல்கி: பணிபூண்டான் விடுதி கிராமத்தில் காவலர்கள், வருவாய்த்துறை அலுவலர்கள், மாஜி ராணுவத்தினர் ஆகியோருக்குச் சுமார் முப்பது ஆண்டுகளுக்கு முன்பு நிலம் ஒதுக்கப்பட்டிருக்கிறது. அதற்கு ஆற்றுப் பாசனம் சரியில்லாததால் வெட்டப்பட்டிருக்கும் கிணறுகளையும் மழைக்கால வெள்ளத்தால் அடித்து வரப்படும் மணல் மூடி விடுகிறதாம். சரியான வடிகால் வசதி இல்லாததால்தான் அவர்களால் கிணற்றுப் பாசனம் கூடச் செய்ய முடியாத நிலை....

கலெக்டர்: அந்த இடத்தை நேரில் பார்த்துச் சர்வே செய்த பிறகுதான் எதையும் சொல்ல முடியும்.

கல்கி: வெட்டாறு, கள்ளாறு, ஆகியவற்றின் இடையிலுள்ள சித்தன்வாழூர் என்ற கிராமத்திலும் இதே வடிகால் பிரச்னைதான். செம்பங்குடி தொழூர் வடிகாலை இன்னும் கொஞ்ச தூரம் கொண்டு சென்று கள்ளாற்றில் கலக்கச் செய்தால் வெள்ளத்தால் அவ்வூர் முழுகுவது தடுக்கப்படும் என்கிறார்கள்.

கலெக்டர்: அந்த வடிகாலின் கரையை உயர்த்த முடியுமானால் உயர்த்தலாம்; பிரச்னை இல்லை.

கல்கி: வேதாரண்யத்திலுள்ள தோப்புத்துறை உயர்நிலைப் பள்ளியிலும், நீலப்பாடி



• சீர்காழியில் சிதிலமடைந்து கொண்டு வரும் நாகேஸ்வரன் கோவில்.....

உயர்நிலைப் பள்ளியிலும் மாணவர்கள் அமர்வதற்கென்று ஒரு பெஞ்சுகூட இல்லாமலிருப்பது ஆச்சரியமாக இருக்கிறது...

கலெக்டர்: அப்படியா? உடனடியாக ஏதாவது ஏற்பாடு செய்ய முடியுமா என்று பார்க்கிறேன்.

கல்கி: வேதாரண்யம் ஒரு தனி தாலுகா தலைநகராக இருந்தும் கூட அங்கு ஒரு முனிசிபல் கோர்ட்கூட இல்லையே...

கலெக்டர் (சிரிப்புடன்): ஒருவேளை அங்கு குற்றங்களே நடக்காமல் இருக்கலாம்!

கல்கி: வேதாரண்யம்—கோடிக் கரையிலுள்ள காடுகளிலிருக்கும் மான்களைச் சிலர் வந்து சுட்டு எடுத்துச் சென்று கொண்டிருப்பதாக அங்குள்ளவர்கள் சொல்கிறார்களே....

கலெக்டர்: யாரென்று சொல்லுங்கள். உடனடியாக நடவடிக்கை எடுக்கிறேன். பொதுவாகச் சொன்னால் எப்படி?

கல்கி: நீங்களே சென்று விசாரித்துப் பாருங்களேன்.

கலெக்டர்: பார்க்கிறேன்.

கல்கி: நாகப்பட்டினம் ஒரு தனி மாவட்டத்தின் தலைநகராகப் போவதாகப் பேசப்படும் இந்த நாளிலும் அவ்வூரில் ஒரு பொதுத் தொலைபேசி வசதியோ, பொதுக் கழிப்பிட வசதியோகூட இல்லாமலிருக்கிறதே?

கலெக்டர்: உண்மையாகவா? உடனடியாக ஏற்பாடு செய்யச் சொல்கிறேன்.

கல்கி: திருவையாறுக்கு அருகிலுள்ள மரூரில் 1954ல் ஹரிஜனக் காலனிக்காக ஒதுக்கப்பட்ட இரண்டு ஏக்கர் நிலத்தில் இன்னமும் வீடுகள் ஏதும் கட்டிக் கொடுக்கப்படவில்லையே?

கலெக்டர்: வரிசையாக அனைவருக்கும் கட்டிக் கொடுக்கப்பட்டுக் கொண்டுதான் இருக்கிறது. வரிசைப்படிதான் வரும்.

கல்கி: முப்பதாண்டுகளுக்கு மேலாகியுமா இன்னும் வரிசையில் வரவில்லை?

கலெக்டர்: வரிசையாகத்தானே வர முடியும்? நிச்சயம் வரும்.

கல்கி: கும்பகோணத்திற்கு அருகிலுள்ள ராம் நகருக்கு நகராட்சியால் ஒப்புதல் அளிக்

கப்பட்டும் அதன் அருகிலேயே உரக் கிடங்கு இருப்பதால் துர்நாற்றம் சகிக்க முடியவில்லை. அதை ஏன் மாற்றக் கூடாது? இத்தனைக்கும் அக்காலனியை உருவாக்கி விற்றவரே அதற்கான மாற்று இடம் தருவதற்குத் தயாராய் இருக்கிறாராம்!

கலெக்டர்: நேரில் பார்த்து விசாரித்துத் தேவையான ஏற்பாடுகளைச் செய்யச் சொல்கிறேன்.

கல்கி: சுய வேலை வாய்ப்புத் திட்டத்தின் கீழ் கடனுதவி பெற வேண்டுமானால் தொகையைப் பொறுத்து, நூறிலிருந்து ஆயிரத்தைந்நூறு ரூபாய் வரை லஞ்சம் நிர்ணயிக்கப்பட்டிருக்கிறதாமே. இல்லையானால் கிடைப்பதில்லையாமே?

கலெக்டர்: குறிப்பிட்டு யாராவது சொல்லும்போது நடவடிக்கை எடுத்துக் கொண்டுதான் வருகிறேன்.

கல்கி: நெல் கொள்முதல் செய்யும் சிவில் சப்ளையிலும் பயங்கர லஞ்சம் புகுந்து விளையாடுவதாக அத்தனை விவசாயிகளும் ஒட்டு மொத்தமாகப் புகார் செய்கிறார்கள்...

கலெக்டர்: உண்மைதான். நானே கூட அது தொடர்பாகப் பத்துப் பேரை சஸ்பெண்ட் செய்திருக்கிறேன். புகார் வரும் போதெல்லாம் நடவடிக்கை எடுத்துக் கொண்டுதான் இருக்கிறேன்.

கல்கி: தஞ்சை—திருச்சி வழியிலுள்ள திருமலைச் சமுத்திரத்தில் ரூட் பஸ்களெல்லாம் நிற்பதே இல்லையாமே?

கலெக்டர்: எனக்கும் இந்தப் புகார் வந்தது. உடனடியாக அந்த ஊரில் எல்லா பஸ்களும் நின்று பயணிகளை ஏற்றி, இறக்கி விட்டுச் செல்ல வேண்டும் என்று எச்சரித்திருக்கிறேன். இல்லையென்றால் தகுந்த நடவடிக்கை எடுப்பேன்.

கல்கி: மன்னார்குடி ரயில்வே ஸ்டேஷன் மூடப்பட்டதற்கு என்ன காரணம்? அதே போல் ஒரத்த நாட்டில் ரயில்வே ஸ்டேஷன் கட்டுவதற்காக நிலம் கையகப்படுத்தப்பட்டும் வேலை துவங்காமல் இருப்பதற்கு என்ன காரணம்? பஸ் முதலாளிகளின் தலையீடுதான்; சம்பந்தப்பட்டவர்களுக்கு அவர்கள் லஞ்சம் கொடுத்ததுதான் காரணம் என்கிறார்களே, உண்மையா?

கலெக்டர்: அதெல்லாம் உண்மையில்லை. பஸ் வசதி அதிகமாகிவிட்டதுதான் காரணம். மக்களும் பஸ்ஸைத்தான் விரும்புகிறார்கள்.

கல்கி: வேதாரண்யம் தாலூகாவிலுள்ள கத்திரிப்புலத்தில் 4,400 வாக்காளர்கள் இருந்தும் அங்கேயொரு மருத்துவமனையோ, சாலை வசதியோ, குடிநீர்ப் பம்புகளோ கூட இல்லையே....

கலெக்டர்: குடிநீர்ப் பம்பு கூடவா இல்லை? பரிசீலித்து ஆவன செய்கிறேன்.

கல்கி: திட்டச்சேரியில் கீழையிலிருந்து பிரிந்து வரும் குமுக்கு மண்ணி வாய்க்காலில் ஒரு மதகு கட்டி அதன் மூலம் 2,500

ஹெக்டேர் நிலம் பாசன வசதி பெறுவதற்காக 76ல் ஒரு திட்டம் தீட்டப்பட்டு பிறகு சில அரசியல் தலையீடுகளினால் அது தடைப்பட்டுப் போனதாமே?

கலெக்டர்: 2500 ஹெக்டேர் பாசனமா? அப்படியெல்லாம் ஒன்றும் நிகழ்ந்திருக்காது.

கல்கி: மயிலாடுதுறையிலுள்ள எஸ். ராமகிருஷ்ணன் என்பவர் மண்ணெண்ணெய் வியாபாரம் (உரிம எண்: 60/76) செய்து வந்தாராம். அவர் வழக்கமாக மண்ணெண்ணெய் வாங்கும் சங்கரய்யர் அண்ட் சன்ஸில் பில் இல்லாமல் அதிகப் பணம் வாங்கிக் கொண்டிருந்ததால் அது பற்றிப் புகார் எழுதிப் போட்டாராம். அதனால் அவருக்கு மண்ணெண்ணெய் கொடுப்பதை நிறுத்தி விட்டார்களாம். காரணம் கேட்டபோது அப்பா பெயரில் உள்ள லைசென்ஸுக்கு மகனுக்குத் தர முடியாதென்று சொல்லிவிட்டார்களாம். இது அநியாயமில்லையா?

கலெக்டர்: இது என் கவனத்திற்கு வரவில்லையே!

கல்கி: இல்லை; உங்களுக்கும் அவர் புகார் அனுப்பியிருக்கிறார்.

கலெக்டர்: அப்படியா? உடனடியாகக் கவனிக்கச் சொல்கிறேன்.

கல்கி: மேல மருதூரில் தனி நபர் சத்தியாகிரகத்தில் சிறை சென்ற 33 தியாகிகளுக்குத் தலா ஐந்து ஏக்கர் நிலம் கொடுக்கப்பட்டதாம். அதில் இருபத்தேழு பேருக்கு மட்டும் தான் பட்டா கொடுக்கப்பட்டுள்ளதாம். மீதி ஆறு பேருக்கு ஏன் கொடுக்கப்படவில்லை?

கலெக்டர்: கவனிக்கச் சொல்கிறேன்.

கல்கி: நார்கப்புடையான்பட்டியில், முன்பு கிணறுகளுக்கு மின் இணைப்புக் கொடுக்கப்பட்டபோது, ஓடும் மோட்டாரின் குதிரை சக்தியை அதிகம் போட்டால்தான் பெரிய டிரான்ஸ்ஃபார்மர்கள் வைப்போம். அப்போதுதான் தடையில்லாமல் மின்சாரம் கிடைக்கும் என்று அப்போதைய அதிகாரிகள் சொன்னார்களாம். அதனால் மூன்று குதிரை சக்தியுள்ள மோட்டாரை உபயோகிப்பவர்கள் கூட ஏழரை குதிரை சக்தி என்று எழுதிக் கொடுத்தார்களாம். இதெல்லாம் மீட்டர் கணக்குப்படி மின்சாரக் கட்டணம் கட்டும்போது பிரச்னையாக இல்லை. ஆனால் இப்போது ஒரு குதிரைச் சக்திக்கு எழுபத்தைந்து ரூபாய் பணம் கட்ட வேண்டும் என்ற நிலை வந்துவிட்டதால் மூன்று கு. சக்தி உபயோகித்தாலும் ஏழரை கு. சக்திக்குப் பணம் கட்டிக் கொண்டிருக்கிறார்களாம். வருத்தப்பட்டுச் சொல்கிறார்கள்.

கலெக்டர்: இது ஒன்றும் பெரிய விஷயம் இல்லை. எழுதிக் கொடுத்துச் சரி செய்து கொள்ளலாம்.

கல்கி: தஞ்சைப் பெரிய கோவிலுக்கு அருகிலுள்ள சிவகங்கைத்தோட்டத்திலுள்ள மான்களுக்குச் சரியான தீவனம் கொடுக்கப் படாததால் பார்க்கவே பரிதாபமாக இருக்கிறது....

* கட்டார பெஞ்சு கூட இல்லாத தோப்புத் துறை அரசு உயர்நிலைப் பள்ளி.



கலெக்டர்: அவற்றையெல்லாம் சென்னையிலுள்ள வண்டலூர் மிருகக் காட்சிச் சாலைக்கு அனுப்பி விடும்படி சிபாரிசு செய்திருக்கிறேன்.

கல்கி: தஞ்சை மாவட்டத்திலுள்ள நவீன அரிசி ஆலை ஒவ்வொன்றிலும் அறுபத்தைந்து பேர் பணியாற்ற வேண்டுமென்றாலும் ஐம்பது அல்லது ஐம்பத்து மூன்று பேர்தான் பணியாற்றுகின்றனராம். மயிலாடுதுறையை எடுத்துக் கொண்டால் ஐம்பத்தொரு பேர் தான் உள்ளனராம். அவர்களிலும் பத்தொன்பது பேர் கடந்த பத்தாண்டு காலமாக நிரந்தரமாக்கப்படாமல் இருக்கின்றனராம். இத்தனைக்கும் இவர்களை வேலைக்கு எடுத்துக் கொண்டபோது இருநூற்று நாற்பது நாளில் நிரந்தரமாக்குவதாக உறுதி மொழி கொடுத்துத்தான் எடுத்துக் கொண்டார்களாம். ஆக, மாவட்டம் முழுவதிலுமுள்ள ஆறு ஆலைகளிலும் மொத்தம் இருநூறு பேர் இப்படி நிரந்தரமில்லாமல் இருக்கிறார்களாமே இது நியாயமா?

கலெக்டர்: உடனடியாக ஏதாவது செய்ய முடியுமா என்று பார்க்கிறேன்.

கல்கி: கடைசியாக ஒன்று. உங்களைப் பற்றி மக்களிடம் விசாரித்தபோது, நீங்கள் மிக மிக நல்லவர் — சுத்தமான கரங்களையுடையவர் என்றும் ஆனால் வேகமாக — டைனமிக்காக இயங்குபவர் இல்லையென்றும் சொல்கிறார்களே?

கலெக்டர் (கொஞ்சம் உணர்ச்சி வசப்பட்டு): டைனமிக்? வாட் ஈஸ் டைனமிக்? விளம்பரங்களை விரும்பாமல் காரியங்களைச் செய்து கொண்டிருந்தால் அது டைனமிக் ஆகாதா? எனக்குக் காரியங்கள் நடப்பது தான் முக்கியம்; விளம்பரங்கள் அல்ல...

கல்கி: ரொம்ப ரொம்ப நன்றி. காரியங்கள்தான் முக்கியம் என்ற கருத்துடைய உங்களால், நாங்கள் இப்போது தஞ்சை மாவட்ட மக்களின் சார்பாக முறையிட்ட காரியங்களும் நடக்கும் என்று மனப்பூர்வமாக நம்புகிறோம். எங்கள் வசதிக்காக, எத்தனையோ சிரமங்களுக்கு இடையிலும் பேட்டிக்காக ஒதுக்கியிருந்த நாளுக்கு ஒரு நாள் முன்னதாகவே பேட்டி கொடுத்ததற்காக உங்களுக்கும், உங்கள் கீழ் பணியாற்றும் மற்ற சக அலுவலர்களுக்கும் மீண்டும் எங்கள் நன்றி. வணக்கம்.

**3**

(ஃபயர் எஞ்சின் போல் எல்லாருக்கும் வயிற்றில் 'கணகண' என்று மணியடிக்கும் பசி வேளை. நேரம் பகல் 1.30 மணி. 'மூணு கட்டு வாங்கினால் ஒரு தீப்பெட்டி இனும்' என்ற சலுகையுடன் வாங்கப் பட்ட பீடியிலிருந்து ஒன்றைப் புகைத்து விட்டு, மாடசாமி பீடி மணம் கமழ உள்ளே வருகிறான்.)

ராகவா: ஏண்டா, இந்த எழவெடுத்த பீடியைப் புடிச்சு அழறீங்க? ஆபீஸ் பூரா உங்களாலே ஒரே சத்தம் — இல்லாட்டி நாத்தம். ச்சே! இனிமே ஆபீசுக்கு வெளியிலே கூடாரம் போட்டுண்டு நிம்மதியா வேலை செய்யலாம் போலிருக்கு!

'(ஆனந்த் சிகரெட் புகை கமழ வருகிறான்.)

ஆனந்த் (வந்து கொண்டே): செஞ்சுடலாம் சார். அப்படியே அந்தக் கூடாரத்துக்கு வெளியிலே அக்கௌண்ட் 'டெண்ட்'ன்னு பிளாஸ்டிக் நேம் போர்ட் போட்டா அமர்க்களமாயிருக்கும். எப்படி?

ராகவா: டேய், நான் இப்போ அக்கௌண்டன்டிலிருந்து ஜி. எம். ஆயாச்சே. ம். கொஞ்ச நாளிலே நெஜமாவே கூடாரம்



போட்டுண்டு உங்களைத் தொலைச்சுடறேனு இல்லையா பார்க்கலாம்.

ஆனந்த்: சார், கூடாரத்துலே உக்காரப் போறேங்கிறீங்க. ஆனா எங்க மாதிரி அதிகாரக் கும்பலுக்கு கூடாஃபி மாதிரி ஆதரவு தரமாட்டேன்னு சொல்றீங்க. முரண்பாடா இருக்கே! அது சரி, கூடாரத்திலே விருந்து பேப்பரெல்லாம் ஒட்டகம் மாதிரி மெள்ள நகருமா?

(மைதிலி பெருமூச்சுடன் உள்ளே வருகிறாள்.)

மைதிலி: என்ன செய்யறது? இந்த உடம்பைப் போட்டுண்டு என்னாலே கூட மெள்ளத்தான் நகர முடியறது. அதுவும் இந்த மே வெயில்லே....

மாடசாமி: சார், கம்பெனிதான் நல்லா பெரிசாயிக்கினே வருதே. ஏர்கண்டிஷன் செஞ்சா என்ன சார்....

ராகவா: ராமராமா! (அச்சென்று தும்மி) அதன் பேரைக் கேட்டாலே எனக்கு மண்டையிலே நீர் கோத்துக்கும். அதெல்லாம் எதுக்கு? சும்மா குளுகுளுன்னு வெட்டி வேர் தட்டி கட்டி....

ஆனந்த்: இதோடா.... அப்புறம் கச்சை கட்டிக் கொண்ட பணிப் பெண்கள் சாமரம் வீச, சல்லாத் துணியிலே தொப்புளுக்குக் கீழே பைஜாமா அணிந்த நடன சிங்காரிகள் பெல்லி டான்ஸ் ஆட, கூடாரத்தில் பாலைவனச் சோலையைப் பார்க்கப் போறீங்களா?

ராகவா (மைதிலியைப் பார்த்து): ம்... இந்தக் கண்றாவியெல்லாம் நான் வெறுமே கேட்டுண்டு இருக்கணுமா?

ஆனந்த்: பின்னே நெஜமாகவே அனுபவிக்கணும்னு சொல்றீங்களா?

(ரகுவீரும் சுசீலாவும் வருகிறார்கள்.)

மாடசாமி: கூடார சார், இதோ பாலைவன லைலாவும் மஜ்னுவும் வர்றாங்க.

ரகுவீர் (ராகவாச்சாரியைப் பார்த்து): எங்க சமாசாரம் கொஞ்சம் தீவிரமாயிண்டு வரது சார். நாங்க ரிஜிஸ்தர் ஆபீஸ்லே கல்யாணம் செஞ்சிண்டு எங்க அப்பாக்கள் கால்களிலே விழுந்தா என்ன ஆகும் சார்?

சுசீ: எங்கப்பா தலையிலே அட்சதையைப் போடமாட்டார். தோசை மிளகாய்ப் பொடியைத்தான் தூவுவார்.

ராகவா: அது எப்படியோ, எனக்குத் தெரியாது. ஆனா என் காலிலே விழுந்தா நான்கூட அட்சதையைப் போட மாட்டேன்.

ரகு, சுசீ: சார்.... சார்....

ராகவா (கோணல்சிரிப்புடன்): கோதுமையைத்தான் போடுவேன். என்னோட டயாபடீசுக்கு டாக்டர் அரிசியைக் கையால தொடக் கூடாதுன்னு சொல்லிட்டார்.

(பாண்டியன் நுழைகிறான்.)

பாண்டி: என்ன சார், போன வாரம் அப்படி ஆய்ப் போச்சே, பாத்தீங்களா?

ஆனந்த்: ஆமாம்பா. ஏதோ ஷார்ஜா — கடைசிப் பந்து — சஸ்பென்ஸ் மாதிரி இருந்திச்சு. எல்லாருக்கும் எம்.டி. ஷோ—காஸ் நோட்டீஸ் குடுக்கப் போறார்னு பாத்தா கடைசிலே பொண்ணோட கல்யாணத்துக்கு நோட்டீஸ் வெச்சாரு.

பாண்டி: அது எதுக்கு பிரதர் லஞ்ச் டயத்திலே குடுத்தாரு?

ஆனந்த்: அவர் பொண்ணைப் பார்த்திருந்தா இந்தக் கேள்வியைக் கேட்டிருக்க மாட்டே. சுத்த தீனிப் பண்டாரம். முகூர்த்தம் டைம் பாத்தியா? சாப்பாட்டுக்கு அப்புறம்தான். எது வேணாலும் பொறுத்துக்கும். ஆனா சாப்பாடு இல்லேன்னா கூப்பாடு போடும்.... ம்.... ஒரு கையிலே கோன் ஐஸ் வெச்சுண்டு எப்படி மாலை மாத்தப் போறதோ? போய்ப் பார்க்கணும்.

ராகவா: தாலி கூட அப்பா மடியிலே உக்காராம, கட்டு சாதக் கூடை மேலே உக்காந்து கட்டிக்கப் போறாளாக்கும்?

பாண்டி: இன்விடேஷன் குடுத்து அன்னிக்கு நடந்த டிராமா லஞ்ச ஊழலுக்கு இல்லேன்னு தெரிய வெச்சுட்டாங்க சரி. ஆனா அன்னிக்கு நடந்த மீட்டிங் எதுக்கு?

ஆனந்த்: அது ஹெட் ஆபீசுலே நடந்த ஊழல் பற்றி, அங்கே விஷயம் பரவ வேண்டாம்னு இங்கே ரகசியமா ஆலோசனையாம். ஆனா அது லஞ்ச ஊழல் பற்றி இல்லையாம். லஞ்ச் ஊழல் பற்றியாம்!



ரகு: அப்பமுன்னு?

ஆனந்த்: பிரதர், ஹெட்டாபீசுலே எல்லாருக்கும் ஃப்ரீயா லஞ்ச் போடறாங்களாம். அதை நிர்வகிக்கிற குழு ஒண்ணு நன்னு சாப்பிட்டாங்களாம்.

மாட: சார், நல்லா வயிறு முட்ட சாப்பிடத்தானே லஞ்ச்?

ஆனந்த்: போடா! சாப்பிட்டது லஞ்ச் மாத்திரம் இல்லே. அதுக்கு ஒதுக்கப்பட்ட பணத்தையும்தான். அங்க விட்ட ஏப்பத்தின் எதிரொலிதான் இந்த மீட்டிங்.... அவங்க பேசினதை அரைகுறையா கேட்டுட்டு மாடசாமி ஏதோ சொல்ல நாம் பதற.... கடைசிலே எம்.டி.க்கு நம்மோட பயத்தைப் பற்றித் தெரிய வந்து இடி இடின்னு சிரிச்சு விஷயத்தைச்சொல்ல.....வேண்டாதவம்பு...

ராகவா: ம்.... காஞ்ச மாடு கம்புலதான் விழும்னு கேள்விப்பட்டிருக்கேன். ஆனா இங்க வம்பிலேனா விழறது!

பாண்டி: சார்....இதானவேண்டாங்கறது! நாங்க பேசிக்கறதை ஒருகமா விடாமகேட்டுக் கறதிலே மாத்திரம் குறைச்சல் இல்லே. ஆனா கமென்ட் மாத்திரம் இப்படி. பாத்திண்டே இருங்க. நாங்களெல்லாம் புலி மாதிரி பாயத்தான் போறோம்.

ராகவா: புலிகளுக்கு எல்லாம் எங்கே பாயறதுக்கு நேரம் இருக்கு? ஒண்ணோடை ஒண்ணு சண்டை போட்டுக்கவே சரியா இருக்கு. அதனால்தான் நரிகள் எல்லாம் வாலாட்டிண்டு இருக்கு. ஆனுங்க சாம்ப வாகிண்டு வராங்க....

சாம்பசிவம் (வந்து கொண்டே): என்ன, பேச்சு புளியைப் பத்தியும் சாம்பலைப் பத்தியும் போயிண்டு இருக்கு? யாரான முழுகாம இருக்காங்களா?

ராகவா: ம்.... இப்போ நம்ப கம்பெனி தான் முழுகாம ஸ்ட்ராங்கா போயிண்டு இருக்கு. இன்னும் ஸ்ட்ராங்க ஆக்க எம்.டி. இத்தாலி போகப் போறாராம்.

ஆனந்த்: அட, இத்தாலியோட வர்த்தக உறவா? எனக்குக்கூட சான்ஸ் கெடச்சா, அங்க போய் ஒரு இத்தாலிப் பெண்ணைக் கல்யாணம் பண்ணிண்டு வர ஆசையாயிருக்கு.

சாம்ப: இத்தாலி பாக்கியம் எல்லாருக்கும் கிடைக்குமா?

மைதிலி (பெருமூச்சுவிட்டு): 'இத்தாலி' பாக்கியமா? அதுக்கெல்லாம் என்னை மாதிரி குண்டா இருக்கக் கூடாது.... சோனியா, அழகா இருக்கணும்....

ராகவா: மைதிலி, மனசைத் தளர விடக் கூடாது. குண்டா இருக்கிற ரோட் ரோலர் ரோடைப் போட்டாத்தான், ஒல்லியா இருக்கிற பத்மினி, பியட் அதன் மேல் ஓட முடியும்.

மைதிலி (விழித்து): என்ன சொல்றீங்க நீங்க....?

ராகவா: அது இல்லே மைதிலி, உடம்பு இளைக்க ஏகப்பட்ட வழி இருக்கே.... நீ மங்கையர் மலர், மங்கை, சுமங்கலி போன்ற புஸ்தகங்கள் எல்லாம் படிக்கிறது கிடையாதா?

மைதிலி: அதெல்லாம் எங்களைவிட ஆண்கள்தான் அதிகமா படிக்கறாங்க!

ஆனந்த்: கரெக்ட், ஒரு இதழ்லேகூட ப்ரா எப்படி செலக்ட் பண்றதுன்னு உபயோகமான குறிப்புகள் குடுத்திருந்தாங்க. அதிலே ஒரு சந்தேகம்....

ராகவா (முறைத்து): டாய்.....

ஆனந்த் (கன்னத்தில் போட்டுக் கொண்டு): சாரி சார், கப்பு கப்பு.... சேச்சே, உளர்றேன், தப்பு..... தப்பு....

முத்து (வந்து கொண்டே): என்னப்பா உதவி, தப்புன்னு காதிலே விழுந்தது. பண முடையா இருந்தா உதவறது தப்பா?

மாட: அது எப்படீங்க? எல்லாருக்கும்தான் முடை வரும். கடனு வாங்கினா என்ன தப்பு? அதைத் திருப்பிக் கேக்கறதுதான் தப்பு.

ரகு: கரெக்ட். நம்ப ஆபீஸ்லே நிறைய பேர் ரகசியமா யார்கிட்டேந்து வாங்கறாங்க தெரியுமா?

ராகவா: நிச்சயமா எங்கிட்டேந்து இல்லே. வில்லியம் ஷேக்ஸ்பியர் சொன்ன மாதிரி நான் கடன் குடுக்கறதும் கிடையாது. வாங்கறதும் கிடையாது.

ஆனந்த்: ரகுவீர், என்னப்பா, புதிர் போடறே? எல்லோரும் யார்கிட்டேந்து கடனு வாங்கறாங்க?

ரகுவீர்: கடனு வாங்கினா பரவாயில்லையே, திருப்பிக் கொடுத்துடலாம். ஆனா....?

ராகவா: ஆனான்னு இழுக்கறியே?

ரகுவீர்: உதவியான்னு வாங்கிக்கறாங்க.

ராகவா: என்னப்பா, புதிர் போடறே?

ரகுவீர்: உதவிக்கு மறு வார்த்தை, 'எய்ட்' சார்.

ராகவா: அதனால என்ன? யார்கிட்டேருந்து எய்டா வாங்கிக்கறாங்க?

ரகுவீர்: மைதிலியும்சுசிலாவும்போயாச்சு. (குரலைத் தாழ்த்தி) இனிமே சொல்லலாம். எல்லாம் கூடைக்காரி நிர்மலாகிட்டேருந்துதான்.

பாண்டி: சார், வாட் இஸ் திஸ்?

ராகவா: என்ன, நிர்மலாகிட்டேருந்து எய்ட்ஸ் வாங்கிக்கறாங்களா?

ஆனந்த்: ஐயோ, என்ன சார் உளர்றீங்க! நிர்மலா சாப்பாடு கொண்டு வரவ சார்... நாங்க சாப்பிடற சாப்பாடு கொண்டுவரவ.... ஏதோ எய்ட்ஸ்னு சொல்றீங்க....

மாடசாமி: இதென்னு சார் புத்சா இருக்கு? புரியாத ஏதோ பேசிக்கினு இருக்கீங்க! எய்ட்ஸுன்னு?

(நிர்மலா அந்தச் சமயத்தில் சாப்பாட்டுக் கூடையுடன் நுழைய, எல்லோரும் முழிக்கின்றனர்.)

(தொடரும்)

# கடிதப் பட்டியல் நீள்கிறது!

* சமீபகாலமாகவே நம்முடைய தமிழக சட்ட சபை பல சாதனை களைப் படைத்து வருகிறது. அந்தச் சாதனை வரிசையில் இடம் பிடிக் கும் 'கவர்னர்.... வேண்டாம்' யோசனை!

ஆங்கரை, ஆனந்

* இது போன்ற 'கனமான' தலையங்கத்தை இதுவரை நான் படித்ததேயில்லை! இன்றைய தமி ழக அரசின் உண்மையான நிலை யை எடுத்துரைத்த அருமையான தலையங்கம்!

சிங்காரப்பேட்டை,
கே.ஆர். சீதா ரமேஷ்.

* கவர்னர் பதவி பற்றிய தங் கள் தலையங்கம் படித்தேன். காங் கிரஸ் அரசும் சரி, ஜனதா அரசும் சரி தங்கள் அரசியல் நலன்களை மட்டும் மனத்தில் கொண்டு கவர் னர் பதவியில் ஒரே நேரத்தில் ஒட்டு மொத்த மாற்றங்களைச் செய்தது வரலாறு.

காஷ்மீர், ஆந்திரா இரண்டி லும் சமீப காலத்தில் நடந்த ஜன நாயகப் படு கொலையின் நாயகர் கள் கவர்னர்களே. எனவே கவர் னர்கள் நியமனம்; அதிகார எல்லை கள் முதலியவற்றை மறுபரிசீலனை செய்வதற்கு இடம் இருக்கிறது என்றே தோன்றுகிறது.

சென்னை—5, எஸ். வாணிசங்கர்

* 'டாக்டர் பட்டங்களில் மோசடி தர்பார்கள்'' — மூலம் சம்பந்தப் பட்டவர்களுக்கு உரைக்கும் விதத் தில் 'வார்த்தையடி' கொடுத்து விட்டீர்கள். அட்டைப்படம் ஒரு ப்ளஸ் பாயிண்ட்டாக அமைந்து விட்டது.

தர்மபுரி—2, வித்யா.

* 'டாக்டர் பட்டங்களில் மோசடி தர்பார்கள்' கட்டுரை படித்தேன். அடி மட்ட மக்களின் பிரச்னையை மட்டும் வெளிப் படுத்துவதோடு அல்லாமல், இது போல, மேல் மட்டப் பணிகளில், உள்ள மோசடிகளையும் படம்பிடித் துக் காட்டும் கல்கியின் தார்மீகப் பணி பாராட்டப்பட வேண்டிய ஒன்று!

சீர்காழி—10, ஆர். எஸ். இராஜ்.

* பி.எச்.டி. படித்து டாக்டர் பட்டம் பெற நடத்தப்படும் தர் பாரின் அவலங்களையும், அநி யாயங்களையும் எடுத்துரைத்த தோடு, ஆராய்ச்சிக் கட்டுரை களின் லட்சணங்களையும் அழ காக எடுத்துரைத்த, 'கவர் ஸ்டோரி', புதுமையானது, தெளி வானது.

நெல்லிக்குப்பம்,
எஸ். ஜெ. சலீம் தமீஜுதீன்.

* 'லஞ்ச் டைம்' நாடகம் நாட் டின் குறைகளைச் சித்திரிக்கும் ஒரு சமுதாய நாடகம் என்றே சொல்ல லாம்...

புதுவை—1,
இ. எம். கோதண்டம்.

* 'சந்தன பேலா' படிக்க சரி, பன்னிரண்டு வாரங்கள் வெளி வரும் 'இந்தத் தொடர்கதையை ஒரிதழ் விடாமல் படித்துச் சிரிக்க வேண்டும் என்று கட்டளையிட் டிருக்கிறீரே, நியாயமா? படிப் பது சரி, எப்படீய்யா சிரிப்பது?

திருநெல்வேலி—11,
டி.எஸ். ஸ்ரீநிவாஸன்.

* என்ன சார், இந்த இதழ் என்ன சிறுகதை சிறப்பிதழா? மூன்று சிறுகதைகளைப் பிரசுரித்து எங் களை ஆனந்தக் கடலில் அமிழ்த்தி மூச்சு முட்ட வைத்துவிட்டீர்களே!

திருமருகல், எம். பிரபாகரன்

* கடைசி பக்கத்தில் வெளி யாகி இருக்கும் ஜோக்குகள் அறுவையிலும் அறுவை; செம அறுவை.

திருச்சி—3, ராஜேந்தர் பிரியன்

* ருக்மிணி பார்த்தசாரதி எழுதிய 'அவருக்குத் தெரியும், அந்த நன்றி உணர்வு' என்ற சிறு கதை ஒரு கலைஞனின் மனத்தில் தோன்றும் ஆசாபாசங்களையும் உதவி செய்வதால் ஏற்படும் உன்னத மன மகிழ்ச்சியையும், தூய கலை உணர்வோடு புதிய கோணத்தில் காட்டிய விதம் அருமை.

லால்குடி, எம். இராஜேந்திரன்.

வட்டமேஜை

* பெரியார் மாவட்ட சிறப்பிதழில் (20.4.86) 'சத்தியமங்கலமே சாட்சி' என்ற கட்டுரையில் ஓடாத கடிகாரத்தை ரிப்பேர் செய்து சரிப் படுத்திய நாங்கள்தான் அந்த ஸ்தூபியையே கட்டியது போன்று ஆங்கிலத்தில் பெரிய அளவில் எழுதிப் பெருமை கொண்டாடுவதாக எள்ளி நகையாடியிருக்கிறீர்கள்.

நாங்கள் ஓடாத கடிகாரத்தை ரிப்பேர் செய்ய வில்லை. அதை அகற்றிவிட்டு, 650 ரூபாய் விலை யில் புதிய எலெக்ட்ரானிக் சுவர் கடிகாரத்தை வாங்கி நகராட்சியின் அனுமதியுடன் ஸ்தூபியில் பொருத்தியிருக்கிறோம். அதைத்தான் கடி காரத்தை லயன்ஸ் கிளப் நிறுவியதாக ஸ்தூபி யில் குறித்துள்ளோம். இது எப்படி ஸ்தூபியையே நாங்கள்தான் கட்டியது என்று பொருள்படும்? கடிகாரத்தைப் பொருத்துவதற்கு முன் அந்த ஸ்தூபி முழுவதையும் அழகாக வர்ணம் தீட்டு வதற்கே சுமார் ரூ 2,000/— (ரூபாய் இரண்டு ஆயிரம் மட்டும்) வரை செலவு செய்துள்ளோம். ஸ்தூபியைக் கட்டியதற்கான விவரங்கள் அடங் கிய அறிவிப்புக் கல் அதே கட்டிடத்தில் வேறு இடத்தில் பதிக்கப்பட்டுள்ளது. தாங்கள் குறிப் பிட்டுள்ளதுபோல் எந்தவிதபோராட்டமும் நடக்கவில்லை, போர்டு மாற்றப்படவுமில்லை.

சத்தியமங்கலம், எஸ்.பி.ஜி. கிருஷ்ணன்,
பொருளாளர், லயன்ஸ் கிளப்

# பழையமுது — சாப்பிடும்









* கா. சேட்டு முகம்மது, விருத்தாசலம்—1

? உங்களுக்கு யாரை நினைத்தால் பாவமாய் இருக்கிறது?

! 'இதுவரை அமைச்சராக இருந்ததே போதும்!' என்று அறிக்கை விட்டுச் சென்ற தேர்தலில் எம்.பி. ஆன குழந்தைவேலுவை!. 'இஸ்லாமுக்கு விரோதமான, யதார்த்த நோக்கு இல்லாத பிற்போக்குத்தனமான சட்டம்' என்று நெருப்புப் பறக்க வர்ணித்த அதே சட்டத்தை அவரே ஆதரித்து வாக்களிக்க வேண்டிய கட்டாயத்துக்குள்ளானரே அந்த நிகழ்ச்சியை நினைக்கும்போதெல்லாம் பாவமாக இருக்கிறது. அதைத் 'தார்மீக ஆதரவு' என்று அவர் வர்ணிக்க நேர்ந்தது அதைவிடப் பரிதாபம்! மனிதன் எப்படியெல்லாம் சுய மரியாதையை இழக்க வேண்டியிருக்கிறது பாருங்கள்!

* கே.வி. நாதன், நெய்வேலி *

? தங்களுடைய கட்சிகளைப் பலப்படுத்த ராஜீவ் காந்தி எடுக்கும் நடவடிக்கைகளுக்கும், எம்.ஜி. ஆர். எடுக்கும் நடவடிக்கைகளுக்கும் என்ன வித்தியாசம்?

! முன்னவருடைய நடவடிக்கை ராணுவ நடவடிக்கை மாதிரி, என்ன செய்யப் போகிறேன்; எப்போது செய்யப் போகிறேன் என்று சொல்லாமல் கொள்ளாமல் திடீரென்று எடுக்கப்படுவது. பின்னவருடையது மோடி மஸ்தான் காட்டும் வித்தை மாதிரி. 'அதோ! இதோ....' என்று கூச்சல் போடுவதோடு சரி; பாம்பும் கீரியும் லேசில் மோதிக் கொள்ளவே செய்யாது!

* எச். எம். ஏ. அஷ்ரப், தோப்புத்துறை

? தாங்கள் பார்க்காத தமிழ்ப் படங்கள் எத்தனை இருக்கும்?

! பார்க்கும்படியான தமிழ்ப் படங்கள் எத்தனை வருகிறதாம்?

* செல்வபாரதி, ஈரோடு—1

? தமிழகத்தைப் பிடித்திருக்கும் புது வியாதி எது?

! இப்போது 'எய்ட்ஸ்' என்கிறார்கள். அதாவது இயற்கையாகவே நமது உடலிலுள்ள நோய்களை எதிர்த்துப் போராடும் சக்தி குறைந்து போவது! ஆனால் அக்கிரமங்களையும், அநியாயங்களையும் லஞ்ச லாவண்யங்களையும் எதிர்த்துப் போராடுகிற சக்தியை நாம் எப்போதோ இழந்துவிட்டோமே அந்த நோய்க்கு என்ன பெயராம்?

* ஆர். ஆனந்த், கும்பகோணம்—1

? தலைவர்களின் பெயரில் புதிய மாவட்டங்களை அமைப்பது ஏன்?

! சத்தியமாக அந்தத் தலைவர்களுடைய தத்துவத்தின் மேல் கொண்ட காதலால் அல்ல!

* ஆனந் . ஆங்கரை

? அடுத்த எம்.எல்.சி. பதவி கலைமாமணி அம்பிகாவுக்கா?

! என்ன கேள்வி கேட்டுவிட்டீர்கள் நண்பரே.... அம்பிகா என்ன எம்.ஜி. ஆரோடு சேர்ந்து நடித்தாரா இல்லை இன்சால்வென்ஸி தான் கொடுத்தாரா? இந்த இரண்டு அடிப்படைத் தகுதிகளில் ஒன்றுகூட இல்லாத அம்பிகாவுக்கு எப்படிக் கொடுப்பதாம் எம்.எல்.சி. பதவி? வெட்கம்! வெட்கம்!!

* ஏ. குமார், சென்னை—17

? இ. காங்கிரஸ் உடையும் போல் இருக்கிறதே?

! உடையாது. அப்படியொரு சூழ்நிலை ஏற்பட்டாலும் தனது ஆரம்ப கால இமேஜைக் கொஞ்சம் கொஞ்சமாக இழந்து கொண்டு வரும் ராஜீவுக்குத்தான் அது சாதகமாக இருக்கும். இது உங்களையும் என்னையும் விட பழம் பெருச்சாளிகளான இ. காங்கிரஸ்காரர்களுக்கு மிகத் தெளிவாகவே தெரியும்.

* இரா. சுவாமிநாதன், சீர்காழி

? கோடை பிறந்ததும் பழையமுது, பச்சை வெங்காயம் சாப்பிடும் வழக்கம் உண்டா?

! ஊஹூம், அது மாதிரி நல்ல பழக்கமெல்லாம் என்னிடம் கிடையாது. காலை எழுந்ததும் காப்பிதான். ஆனால் நல்லது எது என்பது தெரியும். கோடையில் மட்டுமல்ல; எப்போதுமே காலையில் எழுந்ததும் கேழ்வரகுக் கூழ் சாலச் சிறந்தது. கேழ்வரகைச் சுத்தப்படுத்தி முளை கட்டச் செய்து, ஈரம்

# பச்சை வெங்காயம் வழக்கம் உண்டா?



நீங்கள் கேட்டவை — தராசு





பாக வறுத்து.. அரைத்து வைத்துக் கொள்ள வேண்டும். அவ்வப்போது கொஞ்சம் மாவை எடுத்து, நீரில் கரைத்து, கொதிக்க விட்டால் கூழ் ரெடி! சுத்தமான பாலில் கலந்த அந்தக் கேழ்வரகுக் கூழுக்கு ஈடு, இணை ஏதுமில்லை. சந்தேகமிருந்தால் அமைச்சர்.... ஸாரி, ஆயிரம் விளக்குத் தொகுதி எம்.எல்.ஏ. வான கே.ஏ.கே.யைக் கேட்டுப் பாருங்கள். பாலுக்கு எங்கே போக என்று அங்கலாய்ப்பவர்கள் மோர் விட்டும் சாப்பிடலாம்!

* க. ரமேஷ், நல்லுச்சேரி

? இன்றைக்குக் கொ.ப.செ. நிலை என்ன?

! என்றைக்குமே அவருடைய நிலை கவலைக்கிடமாக இருந்ததில்லையே.

* ப. விஜயபாலன், பம்பாய்—23

? பலி ஆட்டுக்கு உதாரணம் ஒன்று சொல்ல முடியுமா?

! ஒருமையில் என்ன, பன்மையிலேயே சொல்லலாம். பிரணப் முகர்ஜி, ஸ்ரீபதி மிஸ்ரா, ஏ.பி. சர்மா, பிரகாஷ் மெஹ்ரோத்ரா ஆகிய நால்வரையும் தூண்டிவிட்டு வேடிக்கை பார்த்தவர் கமலபதி திரிபாதிதான். ஆனால் அவர்களைப் பலியாடுகளாக்கி விட்டு இவர் சாமர்த்தியமாக ராஜீவுடன் பழம் ஆகி தப்பித்துக் கொண்டுவிட்டாரே!

* எஸ். தமீஜுதீன், பண்ருட்டி

? முஸ்லீம் பெண்கள் மசோதா விஷயத்தில் நீங்கள் ராஜீவ் பக்கமா? ஷா பானு பக்கமா?

! முழுக்க முழுக்க சுப்ரீம் கோர்ட் பக்கம். இருபத்தோராம் நூற்றாண்டைப் பற்றி டமாரமடித்துக் கொண்டிருக்கும் ராஜீவ் காந்தி இந்த விஷயத்தில் மிக மிகப் பிற்போக்காக, சிறு பிள்ளைத்தனமான நடந்து கொண்டு விட்டார்.

* ஆர். அப்துல் சலாம், திருச்சி—20

? அந்தக் காலத் தமிழ்ச் சங்கத்துக்கும், இந்தக் காலத் தமிழ்ச் சங்கத்துக்கும் என்ன சார் வித்தியாசம்?

! ஸிம்பிள். அது தமிழை வளர்க்க. இது தங்களை வளர்த்துக் கொள்ள.

* மேகதூதன், ஸ்ரீரங்கம்

? ஜனதா கட்சித் தலைவர் தேர்தலில் ஏற்பட்ட குளறுபடி பற்றி என்ன நினைக்கிறீர்கள்?

! குளறுபடி வந்த வேகத்தில் மறைந்து விட்டதே! சந்திரசேகரை எதிர்த்துப் போட்டியிட்ட சுவாமி அக்னிவேஷைத் தொண்டர்கள் கேரோ செய்தபோது சந்திரசேகரே மேடையிலிருந்து குதித்தோடி வந்து அவரைத் தொண்டர்களிடமிருந்து மீட்டு—தொண்டர்களை அமைதிப்படுத்தித் தேர்தல் நடக்கும்படி செய்திருக்கிறாரே! சந்திரசேகரிடம் தொண்டர்கள் காட்டிய அபரிமித அன்பு, மதிப்பு, சந்திரசேகர் காட்டிய ஜனநாயகப் பண்பு, இரண்டுமே வாழ்த்துதற்குரியன வாகிவிட்டனவே!

* அருண், ஈரோடு—3

? மந்திரவாதிகள் இன்னும் இருக்கிறார்களா?

! தெரியாதா? கடந்த முப்பத்தெட்டாண்டுகளுக்கு மேல் மந்திரம் போட்டுக் கொண்டுதான் இருக்கிறார்கள். மாங்காய்தான் வர மாட்டேன் என்கிறது!

* ரூ 10 பரிசு பெறுபவர்:

கே.வி. நாதன்,
C 46, பொன்னியார் சாலை
வட்டம் 25
நெய்வேலி 607 803.





# “விவசாயம் மட்டுமே கதியல்ல! தஞ்சையின் தலையெழுத்தை மாற்றுங்கள்!”

— தொழிலதிபர் நா. மகாலிங்கம்

சிக்கனமாக நீரைப் பயன்படுவதற்கு இரண்டு முறைகள் இருக்கின்றன. நெல்லா, கரும்பா, அல்லது தென்னையா எந்தப் பயிருக்கு எந்தெந்தக் காலத்தில் எவ்வளவு தண்ணீர் தேவை என்பதை விஞ்ஞான பூர்வமாக ஆராய்ந்து கண்டு பிடித்து அதற்கேற்றபடி சொட்டுத் தண்ணீர் முறையை (Drip irrigation) பயன்படுத்த வேண்டும். இன்னொரு முறை தண்ணீரை வயல்களுக்கு நடுவில், பைப் மூலம் அனுப்பி வைத்து அழுத்தம் கொடுத்துப் பீச்சியடிக்கும் முறை (Sprinkler system). முக்கியமாக நெற்பயிருக்கு இதை அமுல் படுத்திப் பார்க்கலாம். பாலைவனமாக இருந்த இஸ்ரேல் கிடைத்த தண்ணீரை மேற்கண்ட முறைகளில் பயன்படுத்தித்தான் பசுஞ்சோலையாக மாறிக் கொண்டிருக்கிறது. பல வளரும் நாடுகள் இந்த முறைகளைப் பயன்படுத்தி வருகின்றன. இதற்குச் செலவாகுமே என்றால் வங்கிகள் எதற்கு இருக்கின்றன?

அடுத்ததாகப் பயிர் முறையையே மாற்ற வேண்டும். நெல்லை மட்டும் நம்பி இராமல், கரும்பு, தென்னை என்று மாற்றிப் போட வேண்டும். கும்பகோணத்துக்கு அருகில் சணல் விளைவதற்கு ஏற்ற மண்வாகு இருப்பதாகச் சொல்கிறார்கள். அதையும் விருத்தி செய்யலாம். தஞ்சை மாவட்டத்தில் ஆறு சர்க்கரை மில்கள் வைப்பதற்கான சாத்தியக் கூறுகள் இருக்கின்றன. இன்னும் நிறைய நிலங்கள் பயிரிடப்படாமல் இருக்கின்றன. கரும்பு பயிரிட நல்ல வாய்ப்பு இருக்கிறது.

நெல் அரவை ஆலைகள் சர்க்கரை ஆலைகளைப் போல இயங்க வேண்டும். விவசாயிகள் பயிர் வைக்க விதைகள், பயிர் வளரும் போது உரங்கள் போன்றவற்றைக் கொடுத்து, பயிர்களைக் கண்காணிக்க உதவி, முடிவில் விற்பனையையும் அந்த ரைஸ் மில்களே கவனித்துக்கொண்டால் உற்பத்தி பெருகுவதற்கு வாய்ப்பு இருக்கிறது.

அரிசி அரவை ஆலைகளில் கிடைக்கும் உப பொருட்களை வைத்து நிறையத் தொழிற்சாலைகள் வருவதற்கு வாய்ப்பு இருக்கிறது. உதாரணமாகத் தவிடு, உமி, உடைந்த அரிசி போன்றவை உப பொருட்களாக இருக்கின்றன. 100 கிலோ நெல்லை அரவை ஆலையில் கொடுத்தால், அதில் தவிடு, உமி போன்றவை ஐந்து கிலோ இருக்கும். ஒரு குத்து மதிப்பாகக் கணக்கிட்டதில் கூட 45000 டன் தவிடு கிடைக்கும். இந்தத் தவிட்டைப் பயன்படுத்தித் தவிட்டு எண்ணெய் தயார் செய்யும் தொழிற்சாலைகளைக் கொண்டு வரலாம். ஜப்பானில், 60 சதவித சமையல் எண்ணெய் இந்தத் தவிட்டிலிருந்துதான் தயாரிக்கிறார்கள். நாம் ஏன் செய்து பார்க்கக் கூடாது? இப்போது இந்தத் தவிடும், உமியும், கோழிகளுக்கும், மாடுகளுக்கும் மட்டும்தானே பயன்படுகிறது? அதே போல் உடைந்த அரிசியைப் பயன்படுத்தி பீர், ஜின் போன்றவற்றை உற்பத்தி செய்யும் மதுபானத் தொழிற்சாலைகள் ஜப்பானில் இருக்கின்றன. தமிழ்நாட்டின் நெல் உற்பத்தியில் 25 சதவீதம் தஞ்சையில்தான். அரிசி உற்பத்தியில் 15 சதவீதம் உடைந்த அரிசிகளாகப் (Broken rice) போகின்றன. எனவே இந்தவிதமான தொழிற்சாலைகளை நிறுவி வேலை வாய்ப்புக்களைப் பெருக்கலாம்.

தஞ்சை மாவட்டத்தைப் பொறுத்தவரை, கனிம வளங்கள் குறைதான். வேதாரண்யம் பகுதியில் நல்ல தரமான உப்பு உற்பத்தி செய்யப்படுகிறது. அதைப் பயன்படுத்தி ரசாயனத் தொழிற்சாலைகளை (Soda Ash Caustic Soda) ஏற்படுத்தலாமே!

வெள்ளி முலாம் போடுதல், வெண்கலச் சிலைகள், பித்தளைப் பாத்திரங்கள், இசைக் கருவிகள் போன்றவை கும்பகோணத்திலும், அதைச் சுற்றியும் செய்யப்படும் தொழில்கள். இந்தத் தொழில்களுக்கு அரசு இன்னும் அதிக ஊக்கம் அளித்து ஏற்றுமதிகளைக் கூடப் பெருக்கலாம்.

சமீப காலங்களில் நாகப்பட்டினம் அருகில் எண்ணெய் கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது. பெட்ரோலியம் அடிப்படையில் தொழிற்சாலைகள் நிறைய வருவதற்கு நல்ல வாய்ப்பு இருக்கிறது. எனவே சுத்திகரிப்புக்கு வேறு எங்கோ எடுத்துச் செல்வதைத் தவிர்த்து சுத்திகரிப்பு ஆலைகளும் தஞ்சை மாவட்டத்திலேயே உருவாகத் தமிழக அரசு வழி காண வேண்டும். அதோடு நாகைத் துறைமுகத்தை ஆழப்படுத்தி, கப்பல்களைக் கரைக்கருகில் கொண்டு வர வேண்டும்.

இப்படிப் பல தொழிற்சாலைகளை ஏற்படுத்தினால்தான் தஞ்சை விவசாயத் தொழிலாளர்கள், ஆண்டின் பல மாதங்கள் வேலையில்லாமல் தவிப்பதைத் தவிர்க்க முடியும்.

தொகுப்பு: ப்ரியன்

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Limited, at the Bharathan Press, Race Course Road, Guindy, Madras-600 032. (Phone: 431543).

Assistant Editor: P. S. Mani. Editor: K. Rajendran.

# கைபடாத சேவரிட் சேமியா
# மணக்குமே உங்கள் கைபட்டதும்!



சேவரிட் சேமியா மிக நவீனமான அயல் நாட்டு இயந்திரங்களால் மிகச் சுகாதாரமான முறையில் கைபடாமல் தயாரிக்கப்படுகிறது.

உயர்தர சம்பா கோதுமை ரவையில் தயாரிக்கப்படும் சேவரிட் சேமியா சத்து நிறைந்தது. குழைந்து போகாதது. சீக்கிரமாகச் சமைக்கக் கூடியது. மேலும், சேவரிட் சேமியாவை வறுக்க வேண்டிய அவசியமில்லை. இது சமைத்த பின்பும் பால்போல் வெண்மையாக இருக்கும்!

சிற்றுண்டிகளானாலும், பாயசம் போன்ற விசேஷ உணவு வகைகளானாலும் சேவரிட் சேமியா உங்கள் சமையலுக்கு ஊட்டமும் சுவையும் கூட்டுகிறது!

ஆகையினால்தான் குடும்பநலன் கருதும் குடும்பத் தலைவிகள் விரும்பி வாங்குவது சேவரிட் சேமியாவே!







**முத்தான அம்மா சமைப்பது**
**சத்தான சேவரிட் சேமியா!**

**Savorit**
**சேமியா**

Sista's - UIM.482.85 TMA

REGISTERED No. M 4392
Registered as a Newspaper in Sri Lanka

மென்மையான மிருது
வண்ணங்களிலோ,
பளிச்சிடும் பன்னிற
கலவையிலோ, கண்ணைக்-
கவ்வும் அச்சழகுடன்,
ராஜ்கமல் காட்டன் மற்றும்
பாலியெஸ்டர் புடவைகள்
நிகரற்ற கவர்ச்சி
அம்சத்துடன்
மிளிர்கின்றன.

# அழகும் லாவண்யமும் ஒருமித்தப் படைப்பு!

kiron/rks/8614

ராஜ்கமல்
பாலியெஸ்டர்
புடவைகளில்
ஜொலிப்பது
சினிமா நட்சத்திரம்
ஜெயப்ரதா

# ராஜ்கமல்

பாலியெஸ்டர் மற்றும் காட்டன் ப்ரிண்டட் புடவைகள்